*Ūḻiyaṉ*

*Malar 10, itaḻ 28*

*April 01, 1930*

Record no. 148

சென்னை பதிவு எண் கடுக　　கசு-பக்கங்கள்.　　தந்தி விலாசம்:—"ஊழியன்,

சந்தா விபரம்.
வருடச் சந்தா ... ௩—0—0
ஆறுமாதச் சந்தா ... ௧—௮—0
வெளிநாடு வருடச்சந்தா ... ௪—0—0

விளம்பர விகிதம்.

# ஊழியன்.

The "Oolian," a Nationalist Weekly.

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

நல்லவை வாழ்க!　　அல்லவை ஆழ்க!

மலர். ௧௦. }　　காரைக்குடி, சுக்கில-ஹு பங்குனி-மீ ௧௧-உ செவ்வாய்க்கிழமை.　　{ இதழ் ௨அ

## மலர் மணம்.

### சீர்திருத்த நெறிகள்.

(தி. ஐ. ர.)

மக்களின் இன்பத்தைப் பெருக்குவதே சமூகச் சீர்திருத்தத்தின் நோக்கம் என்பதை நண்பர்கள் ஒப்புக்கொள்ளுவார்கள் என்பதில் ஐயமில்லை. அங்ஙனமாக, மக்கள் இன்பம் பெருக்கும் முயற்சிகளே சீர்திருத்தத் தொண்டுகளாகும் என்பதை நவிலவா வேண்டும்? மனிதருக்குக் களங்கமற்ற இன்பம் பயக்கும் நெறிகளைக் கோலி, திட்டங்களை வகுத்தல்தான் சீர்திருத்தவாதியர் முதற்கடன். ஆனால், சீர்திருத்தவாதியர் பலர் இத்தகைய காரியங்களைப் புரிவதை இந்நாள் நமது நாட்டில் காண்கின்றோமில்லை. ஜனங்களின் வாழ்விலே, பிறப்பு முதல் இறப்புவரையில், 'அது குறை' 'இது பிழை', 'அது குற்றம்,' 'இது தவறு' என்று குற்றம் கூறுவதையே, சீர்திருத்த வாதியர் பலர் தம் தொழிலாகக் கொண்டுள்ளார்கள். இதனால், சீர்திருத்தம் எதனையும் சாதித்துவிடமுடியாது. எப்படி முடியும்? குறை, குறை என்ற பல்லவியையே நாம் பாடிக்கொண்டிருந்தால், ஜனங்களின் மனம் மருண்டு வெதும்புமேயன்றி, இன்பம் காணும் மார்க்கத்தை அவர்கள் காணப்போவதில்லை; காணமுடியாது.

* * *

ஜனங்கள் எந்தெந்த விதமாக வாழ்ந்தால், அவர்கள் களிப்பு நிறைந்து தம் ஜீவியத்தைக் கழிக்கமுடியும் என்பதைச் சீர்திருத்த வாதியர் அவர்க்குப் புகட்டவேண்டும். போதனைக்கே ஓர் முறையுண்டு. உண்மையும், உருக்கமும், அன்பும், அனுதாபமும் உபதேசத்தின் சாதனங்களாக அமைந்தாலன்றி, உபதேசம் மக்களின் இதயத்தை அணுகமாட்டாது. இதயத்தைப் பற்றாத எதுவும் மனிதனுக்கு இன்பத்தை யளிக்கமுடியாது. இன்பமே சீர்திருத்த நோக்கமல்லவா?

* * *

ஆயிரம் குறைகளை எடுத்துக் காட்டுவதினும்; ஓரேஒரு நல்வழியைச் சுட்டிக்காட்டுவதுமேலாகும். எல்லாம் குறைகளேயென்று ஒருவன் தனது வாழ்க்கையைப்பற்றி எண்ணத் தொடங்கினால், ஒன்று அவன் தன்னைத் தற்கொலை செய்துகொள்ளத் தோன்றும் வெறுப்பையடைவான்; அல்லது வெறிகொள்ளுவான். வெறி செல்லக்கூடிய வழியை நாம் திட்டமாகக் கூறமுடியாது.

* * *

மனிதவாழ்வை இன்புறச் செய்வன எவை என்பதைச் சீர்திருத்தக்காரன் கவனத்திருத்தல்வேண்டும். உடல்தேவைகளின் பூர்த்தி மனிதனுக்கு இன்பம் பயக்கும். அவ்வாறே பல உளத்தேவைகளும் உண்டு. புலன் இச்சைகள் உடல்தேவைகள். கற்பனையும், அறிவும் வேண்டும் நுட்ப இச்சைகளும் மனிதனுக்கு உண்டு. மனிதனது உடல்தேவைகள் பூர்த்தியாகக் கூடியவசதிகள், செல்வச் செழிப்பிலே உண்டு. உளத் தேவைகள் திருப்தி பெறுதல், கலைகளாலும் விஞ்ஞான ஆராய்ச்சிகளாலு மாகும்.

* * *

மனிதர்கள் யாவருக்கும், போதிய ஊணும் உடையும் வேண்டும். மிடியும் துன்பமும் இல்லாதிருக்க வேண்டும். மனிதர்கள் யாவரும் திருப்தியுற ஊணும் உடையும் அன்ன பிறவசதிகளும், பரவிக் கிடைக்குமானால், எவனுக்கும் எவனும் உடலடிமையாக மாட்டான். செல்வம் நிறைந்தவனுக்கு, வறுமையால் வாடுபவன் சேவகனாகின்றான். எனவே, நாட்டின் பொதுச் செல்வத்தைச் செழுப்பிக்க வேண்டும், "ஏழையென்றும் அடிமையென்றும் எவனுமில்லை ஜாதியில்" என்று நம் புதுமைக்கவி கூறியதுபோல, ஏழ்மை தொலைந்து, எவனுக்கும் உணவுடைத் தொல்லைகள் ஏற்படாவண்ணம் தொழில்களையும் சமுதாயத் தொடர்புகளையும் அமைத்தல் வேண்டும். எவனுக்கும் தொழில், எவனுக்கும் ஊதியம்—இந்தத் தத்துவம் அனுபவத்திலே சாத்தியமாகக் கூடிய அமைப்புக்களையும் முறைகளையும் ஸ்தாபித்தல் வேண்டும்.

* * *

பணம் செய்யும் செப்படு வித்தைகளை வெருட்ட வேண்டும். நாட்டின் செல்வம் நாட்டிலே தங்கவேண்டும். அப்படித் தங்குவதும் நாட்டவர் யாவருக்கும் தொழிலளித்து, உணவளித்து, உடையளித்து, யாவரையும் உடல் பற்றிய மட்டில் சுதந்திர மனிதர்களாக்குதல் வேண்டும். கைத்தொழில்களை வளர்க்கும் ஸ்தாபனங்களை நிறுவ வேண்டும். பெருந்தொழில் ஸ்தாபனங்களின் இலாபம் சில நியதிகள் மூலம், சிறு தொழில்களை நசுக்கா வண்ணமும், தொழிலாளர்களை நெருக்கா வண்ணமும், பிரித்து வழங்குதல் வேண்டும். உண்மையான ஜன சமூகச் சீர்திருத்தக் காரர்கள் இத்துறைகளில் தங்கள் கவனத்தைச் செலுத்தாதிருக்க முடியுமா?

* * *

உளத் தேவைகளைப் பார்ப்போம். இலக்கியம், அறிவுக் கலைகள் ஆகியன இருக்கின்றன. உயரிய இலக்கியங்களும், அழகுக் கலைகளும், மனிதனது உணர்ச்சிகளையும் பண்படுத்துகின்றன; ஓர் நுண்ணிய ஆனந்தத்தையும் மனிதனுக்குத் தருகின்றன. அறிவுக்கலைகளும் அவ்வாறே, அவனது அறிவைப் பண்படுத்துகின்றன; அவனது அறிவுப் பசியை ஆற்றி, ஓர் இன்பத்தையும் தருகின்றன. கலைகளிலே இன்பம் கண்டவன், உணவையும் உடையையுங்கூடச் சிறிதென மதித்து விடுவான். ஈன்ஸ்டீன் என்ற உலகப் பிரவசித்த ஜர்மன்மேதாவி அறிவுக் கலைஞன் அதனிடம் கொள்ளுவது, ஓர் கட்டழகியான மங்கையிடம் அவளது காதலன் கொள்ளும் காதலுக்கு ஒப்பென சமீபத்தில் கூறினான். இது உண்மையாகும். நமது தெய்வப் புலவரும் "செவிக்குண வில்லாத போழ்து சிறிது—வயிற்றுக்கு மீயப்படும்" என்றானன்றோ? மனிதனுக்குப் பல நுண்ணிய பசிகளும் உண்டு. அவற்றைப் பூர்த்தி செய்தல், இலக்கியமும், கலைகளுமேயாகும். எனவே, அவற்றைப் பொன்னே போல் போற்றி வளர்க்க வேண்டும்.

* * *

"தனி யொருவனுக்கும் உணவில்லை" என்றுதோர் செல்வச் செழிப்பை நாட்டிலே உண்டாக்கும் முயற்சியினால், மனிதர்களுள் ஒருவருக் கொருவர் இடையூறு புரியாத மனோபாவத்தை உண்டாக்கலாம். ஒவ்வொருவரும் உடல்தேவைகள் பற்றிய மட்டில் சுதந்திரமுற்று வாழ்வார்கள். கலைகளும், இலக்கியமுமோ அவர்களுக்குள்ளே சகோதர பாவத்தை உண்டாக்கி வளர்க்கும். உழைப்பு மேடையிலே ஒற்றுமையுண்டு. பயனைப் பிரிக்கும்பொழுது தகரார் வாராமலிருப்பதற்குத் தக்க முறைகள் கோலிவிட்டால், வசதிகளை யாவரும் பெற்றுச் சுதந்திரமாய் வாழ்வர். கலைகளிலே ஓர் நுண்ணிய இன்பமுண்டு, அதனை அனுபவிப்பதிலே மனிதர் வேறுபாடுகள் காண்பதில்லை. சங்கீதத்தை எடுத்துக் கொள்ளுங்கள், உண்மையான சங்கீத ஞானமுடையவனது செவி, பாடுபவன் குலத்தையும் கோத்திரத்தையும் பார்ப்பதுண்டா? இவ்வாறேதான் மற்ற ஒவ்வொரு கலைக்கும் இலக்கியத்துக்கும். உண்மையான சுவைகளை வளர்த்துக் கொண்டால், கற்பனைப் பேதங்கள் ஒழிந்து போய்விடும். பேதங்களையும், வேறுபாடுகளையும் களைந்து, மனிதர் யாவரும் இன்புற்று வாழவேண்டு மென்று வெறும் ஆரவாரம் செய்வதால் பயனில்லை. மிடிமையொழித்து, அழகையும் ஆனந்தத்தையும் மனிதர்கள் முன்னேவைத்தால், அவர்கள் அவற்றிடம் மோகங் கொண்டு ஓடி வருவார்கள். இவ்வாறின்றிப் பேதங்களை யுண்டாக்கிப் பேதங்களைக் களைய எண்ணும் முயற்சி ஒருகாலும் வெற்றி பெறாது.

* * *

மனிதனுக்கு உள்ள இச்சைகளும் ஆர்வங்களும், அறிவும் கவனிக்கப்பட்டாலன்றி, அவற்றால் மனிதனுக்கு உண்டாகும்பசியைத் தேவைகளைக் கணித்துக்கொண்டாலன்றி, சீர்திருத்தம் எதுவும் சாத்தியமல்ல. மிடிமையை யொழிப்பதன் மூலம், உடல் தேவைகளைப்பற்றி மனக்கவலை மறைந்து போம். அடுத்தபடியாக, அழகுக்கலைகள் மனிதருக்கு அழகிய சுவைகளை வளர்க்கும். அழகற்ற வழக்கங்கள், ஆனந்தமளிக்காத சம்பிரதாயங்கள், அழகுச்சுவை வளர்ப்பால் தாமே மாய்ந்துபோம். மனிதர்களுக்கு அழகுச்சுவை யில்லாததால்தான், வனப்பற்ற வழக்கங்கள் உயிருடன் நிலவுகின்றன. அறிவுக் கலைகளால், மனிதனுக்கு அறிவு மலர்ச்சி ஏற்படும். அப்பொழுது பொருளற்ற சம்பிரதாயங்கள், தாமே மாயும். ஜனங்களின் மிடிமையிலே அழகில்லை; கலைகளில் சுவை காணு வாழ்விலே இன்பமில்லை. அழகையுணர்ந்த, கலைச்சுவை படைத்த மனிதர்கள்தாம் சீர்திருத்தத் தலைவர்களாக முடியும்; அவர்கள் வகுப்பவையே சீர்திருத்த நெறிகளாகவிருக்கும்.

## நோட்டீஸ்.

இராமநாதபுரம் ஜில்லா சிவகெங்கை ஜமீன் ஒக்கூரிலிருக்கும் முத்தணன் அம்பலம் மகன் அழகிரி இதன் மூலம் தெரிவித்துக் கொள்வது யென்னவென்றால்—எந்த கப்பனாரா கிய ஒண்டடி முத்தணன் அம்பலத்துக்கு சுமார் வயது 50-ஆகிறது ஷடியாருக்கு சுயார்ஜித சொத்துக்கள் ஒன்றுமே இல்லை ஆனால் ஷடியார் பிதாவால் ஏற்பட்ட பூர்வீக சொத்துக்களாகிய வீடுவாசல் புஞ்சை நஞ்சைகளையரு ஷடி ஒக்கூரில் இருந்துவருகிறது. தற்சமயம் யென் தகப்பனார் குடும்பத்தில் ஒற்றுமை யில்லாமலும் துஷ்டர்கள் சகவாசம் செய்துகொண்டும் அக்கிரமச் செலவுகள் செய்துகொண்டும் வருகிறார். யெங்கள் குடும்பத்துக்கு பாத்தியமான சொத்துக்களுக்கும் யென் தகப்பனாருக்கும் யாதொரு விதமான பாத்தியமும் கிடையாது. ஷடி யாரிடம் கிரயம் ஒத்தி அடமானம் முதலிய தஸ்தவேஜி களின் பேரில் கடன் கொடுக்கக் கூடாது யென்ற விபரத்தையும் மீறி ஷடி சொத்துக் களின் பேரில் கடன் கொடுத்தால் என்னையும் ஷடி சொத்துக்களையும் கட்டுப் படுத்த மாட்டாது என்ற விபரத்தையும் இதன் மூலம் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ஒ. மு. அழகிரி
சுக்கில பங்குனி ௧௭-உ
ஒக்கூர்

---

### தேவகோட்டை.

*சரஸ்வதி வாசகசாலை:*—இந்நகர் திருவாளர் செ. மு. லெ. அழ. சுவாமிநாதன் அவர்கட்கு இம்மதி பதினோராம் நாள் நடைபெற்ற திருமணத்தை முன்னிட்டு நமது வாசகசாலைக்கு போய் மூன்று அன்புடன் நன்கொடை அளித்துள்ளார்கள் அவர்கட்கு வாசகசாலையின் சார்பாக நன்றி செலுத்துவதுடன் மணமக்கள் நீடூழிவாழ்க எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றேன் எனக் காரியதரிசி எழுதுகின்றார்.

### ஹந்தவான்ஜில்லா ஆதி திராவிடர் மகாநாடு.

இம்மகாநாடு பிரமோதூத வருஷம் சித்திரைமாதம் ௪,௫-உ புதன் வியாழக்கிழமைகளில் (௧௬, ௧௭-௪-௩௰)கையானில் நடைபெறும். திரு. சாமி சோமசுந்தரம் அவர்கள் மகாநாட்டை திறந்துவைப்பார். பாகநேரி திரு. ஆர் வி. சாமிநாதன்—மகாநாட்டுத் தலைவர் திரு சு ரா சுந்தரமுதலியார்—வரவேற்புக் கமிட்டித் தலைவர் திரு ஆ தி சுப்பையா—தொண்டர் படைத்தலைவர். வரவேற்புச் கமிட்டி அங்கத்தினர்கள்: திருவாளர்களான சி அ கருப்பன், பெ ரி வீரப்பன், வ சி சுந்தன், பா மாயன், மு காடி, சோ செருஞ்செக்குழியான், ந கருப்பன், ம ப்ள்ளிக்கூடத்தான், பா. பொன்னுச்சாமி முதலியோர் ஆவர். இதைக் கண்ணுறும் அன்பர்களும் அபிமானிகளும் விஜயஞ் செய்து மகாநாட்டைச் சிறப்பித்து வைக்குமாறு அதி வியமுடன் கேட்டுக்கொள்ளுகிறேம். பிரவேசக்கட்டணம் ரூ ௧-௦-௦; ௦-௨-௦ என்று திரு எம் கருப்பையா, கே வி கருப்பன் (காரியதரிசிகள்) அறிவிக்கிறார்கள்.

---

## அண்ணாமலை மண்டப அடிகோல் விழா.

நந்தவனத் திறப்பு வைபவம்.

(நமது விசேஷ நிருபரிடமிருந்து)

மார்ச்சு ௨௪-ம் தேதி சிதம்பரத்தில் செட்டிநாட்டரசர் ராஜா சர் அண்ணாமலை செட்டியாரவர்கள் பெருங்கொடையால் தோற்றுவிக்கப் பெற்ற தமிழ் பல்கலைக்கழக செனட்சபை ஆரம்பம், அண்ணாமலைமண்டபம் அடிகோல்தல். நந்தவனத் திறப்பு, ஆகிய விழாக்கள் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பட்டன. அவ்விழாக்களுக்கு, தென்னாட்டிலுள்ள பிரபல கனவந்தர்கள்,போறிவாளர்கள் ஆகிய பல பெரியார்கள் வந்திருந்து சிறப்பித்தனர்.

### கவர்னர் வருகை.

அவ்விழாக்கள் நடாத்துதற்கு சென்னை கவர்னராகிய மே. த. சர் ஜார்ஜ் ஸ்டான்லி அவர்கள் தமது அந்தரங்கக் காரியதரிசி ராணுவக் காரியதரிசி முதலியவர்களோடு திருவனந்தபுரம் எக்ஸ்பிரசில் வந்து சேர்ந்தார். சிதம்பரம் ஸ்டேஷனில் கலெக்டர், ஜில்லா போலீசு சூப்பிரண்டு முதலியோர்களால் வரவேற்கப்பட்டு நந்தனார் கல்விக் கழகத்தைப் பார்வையிடும் பொருட்டு சென்றார்.

### நந்தனார் கல்விக்கழகம்.

இக்கழகமானது சென்னைச் சட்ட சபை அங்கத்தவரான சுவாமி சகஜானந்த சுவாமி அவர்களால் ஆரம்பிக்கப் பட்டது. இப்பாடசாலை நந்தனார் பரிசுத்தமடைந்ததாகச் சொல்லப்படும் ஓமக்குளம் எனும் இடத்தில் அமைந்துளது. இங்கு ஓர் உயர்தர எலிமெண்டரி பாடசாலை யமைக்கப்பெற்று அ-ஆசிரியர்களும் நியமிக்கப் பட்டுளார். இதில் ௬௫௦-மாணவர்கள் கல்வி பயின்று வருகிறார்கள். வதிதற்கு வசதியும் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. இங்கு ஓர் தகுதி வாய்ந்த பாடசாலை ஏற்படுத்தும் பொருட்டு அரசாங்கத்தார் ரூ ௧௬,௦௦௦ அளித்துள்ளார். இதற்கு ராஜா சர் அண்ணாமலையார் போஷகாகவும் இருக்கின்றார்கள்!

இக்கழகத்திற்கு கவர்னர் வந்ததும் சுவாமி சகஜானந்தர், முனிசாமி ஆகியோர்களால்வரவேற்கப்பட்டு,வகுப்புக்கள் யாவற்றையும் பார்வையிட்டார்.

### நகரசபை உபசாரம்.

பின்னர், ரயில்வே ஸ்டேஷன் பக்கத்திலிருக்கும் காசிமடம் மைதானத்திற்கு கவர்னர் மோட்டாரில் சென்றார். இங்குதான் அண்ணாமலை மண்டபம் கட்டவும் நந்தவனம் ஏற்படுத்தவும் நிச்சயிக்கப் பட்டிருந்தது. இங்கு சென்னை முதலிய இடங்களிலிருந்து ஏராளமான கனவான்கள் வந்திருந்தார்கள். இங்கு மிக அழகாக அமைக்கப்பட்டிருந்த கொட்டகைக்கு மே. த. கவர்னர், நகரசபைத் தலைவரான திரு நடராஜ ஜடாவல்லபர் அவர்களால் அழைத்துச் செல்லப் பட்டார். பின்னர், நகரசபைத் தலைவரால் ஓர் உபசாரப் பத்திரம் வாசித்து அளிக்கப் பட்டது. அதற்குத் தகுந்த பதில் கவர்னரவர்களால் சுருக்கமாகக் கூறப்பட்டது.

### நந்தவனத் திறப்பு விழா.

உபசாரப் பத்திரம் அளிக்கப் பட்ட பின்னர் அண்ணாமலை மண்டப அடிகோல் விழாவும் நந்தவனத் திறப்பு விழாவும் நடைபெற்றன. முனிசிபல் சேர்மன் திரு. நடராஜன் அவர்கள்,மே த. கவர்னர் அவர்களை இவ்விழாவை நடாத்திவைக்கக் கேட்டுக்கொள்ளும் போது நிகழ்த்திய சொற்பெருக்கின் சாரமாவது:—

"இந்நகரமானது கீழ் பக்கத்தில் விசாலமுற்றதாலும், வியாபாரம், உயர்தரக்கல்வி, ஜனத்தொகை முதலியவை பெருகிவருவதாலும், இளைஞர், வயோதிகர் முதலியோர் இளைப்பாறுதற்கு ஓர் இடம் தேவை எனப்பட்டது. இத்தேவையை உணர்ந்த ராஜா சர் அண்ணாமலையார் அதனை முற்றுப்பெறச் செய்ய ரூ அ௦௦௦ உவந்தளித்தார்கள். இப்பணமானது அவர் பாங்கில் போடப்பெற்றுத் தற்போது ரூ ௧௪,௦௦௦ மாகப் பெருகியுள்ளது. இத்தொகையை ஆதாரமாகக்கொண்டு ஓர் நந்தவனமும், மண்டபமும் கட்டுவதென முடிவு செய்யப்பட்டது. இதுபற்றிய வேண்டுகோள் வெளியிட்டபோது இத்திட்டத்திற்காக இன்னும் ரூபா-௧௫,௦௦௦ ராஜாசாகிப் அளித்தார்கள். இம்மாளிகையும், நந்தவனமும் ஏற்படுத்துவதற்குள்ள இந்நிலமானது திருப்புனந்தாள் ஆதீனத்தைச் சார்ந்தது. அத்திருப்புனந்தாள் ஆதீன கர்த்தா காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் தமது முன்னோரின் ஞாபகார்த்தமாக, நந்தவனம், டௌன்ஹால் அமைத்தற்காக ஏழு ஏக்கர் நிலம் அளித்துள்ளார். பொது மக்கள் ஆதரவால் இந்நந்தவனமும், நகர மண்டபமும் முற்றுப்பெறும் என எதிர்பார்க்கிறோம்."

### நந்தவனத் திறப்பு.

அப்போது நந்தவனத்தைத் திறந்து வைத்து, நகரமண்டப அஸ்திவாரக்கல் நாட்டுங்கால், மே. த. கவர்னர் கூறியதாவது:—"கனவான்களே! இப்புது நந்தவனம், நகர மண்டபம் ஆகிய இரண்டையும் ஆரம்பிக்கும் விஷயத்தில் கலந்துகொள்ளும் அவகாசம் எனக்குக் கிடைத்ததற்காக நான் பெரும் மகிழ்வெய்துகின்றேன். இவற்றிற்குக் பெரும் கொடையாளி என்று எங்கும் புகழ்படைத்த கௌரவ ராஜா சர் அண்ணாமலை செட்டியார் பெயர் அளிப்பதென்று நீங்கள் நிச்சயித்தது மிகவும் பொருத்தமானதே. உங்களுக்காக அவர்களும் அவர் குடும்பத்தாரும் செய்த நற்பணிகட்காக நீங்கள் சிறப்பாக நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறீர்கள். உங்களிடையே அவர் செய்தவற்றுள் மிகச் சிறப்புவாய்ந்தது இச் சிதம்பரத்தில் ஓர் புதுப் பல்கலைக்கழகம் தோற்றுவிக்க அவர் அளித்த பெரும் கொடையாகும். அதைப்பற்றி இன்று செனட்சபை ஆரம்பவிழாவில் குறிப்பிடவேண்டியிருப்பதால் இங்கு எதுவும் கூற நான் விரும்பவில்லை. மண்டபமும் நந்தவனமும் ஏற்படுத்த உதவி புரிந்தவர்கள் யாவருக்கும் நன்றிபாராட்ட விரும்புகிறேன். அவருள், தாராளகுணத்தோடு இதுவகைக்கு நிலம் அளிக்க முன்வந்த திருப்புனந்தாள் ஆதீன கர்த்தாவிற்கு நமதுநன்றி சிறப்பாக உரியதாகுக.

"இந்நகர் மண்டபமும் நந்தவனமும் ஓர் பெரும் அவசியத்தை முற்றுப் பெறச்செய்யும் என நான் அறிவேன். இம்மாகாணத்திலுள்ள பல நகரசபைகள் உங்களைப் போன்று இத்தகையவை ஏற்படுத்துவதைக் காண நான் பெரும் ஆவல் கொள்வதோடு உங்களது இம்முயற்சியைப் பெரிதும் பாராட்டுகிறேன்"

என்று கூறிக் கல்நாட்டு விழாவை நிறைவேற்றி வைத்தார்.

### ஆலய தரிசனம்.

பின்னர், கவர்னர் தமது பரிவாரங்களோடு, நடராஜ ஆலயம் சென்று அங்குள்ள வாகனங்கள், நகைகள், ஆயிரக்கால் மண்டபம் முதலியவற்ப் பார்வையிட்டார். சுவாமி தரிசனமும் செய்தார். பின்னர் எல்லோரும் அண்ணாமலை நகர் வந்து சேவே அங்கு ராஜா சர் அண்ணாமலையாரோடு கவர்னர் காலை உண்டி யருந்தினர்.

---

## நோட்டீஸ்.

தேவகோட்டை
டிஸ்டிக்ட் முனிசிப் கோர்ட்டு
S. C. No 1024 of 1929

வாதி.

முரு. வ. ராம. பெரியகருப்பஞ் செட்டியார்.

பிரதிவாதிகள்.

1 சுப்பய்யா அம்பலம்.
2 காளிமுத்து அம்பலம்.

ஷ்டியால் பிரதிவாதிகள் பேரில் ஷடியார்களால் எழுதிக் கொடுக்கப்பட்டிருக்கிற பிராமிசரி நோட்டுப்படி ரூ 149—1—6-க்கு தவா செய்யப்பட்டு. 29—3—30 வாயிதா ஏற்பட்டிருக்கிறது. அதில் பிரதிவாதிகளுக்கு ஏதாவது ஆக்ஷேபனை யிருந்தால் ஷடி வாயிதாவன்று தெரிவித்துக் கொள்ள வேண்டியது.

வி. ராமஸ்வாமி அய்யர்
வாதி வக்கீல்
தேவகோட்டை.
25—3—30

---







## மாங்கல்யபேதம்

அல்லது

## இரட்டை நீதி.

ஓர் சமுதாய நாடகம்.
[ஆண்டி.]

(சென்ற வாரத் தொடர்ச்சி)

என்மனைவியை வேசியாக்கிய அவன் அகோ அணிவகுத்தத படையொன்றைப் போல் பட்டப்பகலில் என்னைநோக்கிஎதிர்க்கிறான். கடவுள் சாக்ஷியாகச் சொல்லுவேன், எனக்கு நேர்ந்த இக்கதியில் பத்தில் ஒரு அம்சமேனும் உங்களுள் யாருக்கேனும் நேர்ந்திருக்குமாயின் நீங்கள் அவ்விரு மூர்க்கர்களையும் அக்கணமே ஒன்றாகச் சுட்டு வீழ்த்திருப்பீர்கள்! உங்களை ஒரு கோர்ட்டாரும் தண்டனை செய்திருக்கமாட்டார்கள்; ஏனெனில் நியாயமான முன் கோபமென்ற சித்தசாபல் யாதிக்கம் உங்களைச் சிகைஷயினின்றும் காப்பாற்றியிருக்கும்— ஆயினும் யான் அவ்விதம் செய்தேனா? அவனைச் சுட்டேனோ? அவர்களுடைய ஒரு ரோமத்திற்கேனும் ஹானி விளைவித்தேனா? இந்துவான என்னுடைய ஜீவகாருண்யச் செழிப்பு அவ்விருவருயிர்களையும் காப்பாற்றவன்றோ செய்தது?

*பிச்சை:*— ஜீவகாருண்யமா? ஒருக்காலுமில்லை. உன் குற்றமுள்ள நெஞ்சம் உன் கோபத்தையும் குன்றச் செய்துவிட்டது!

[கூட்டத்திலிருந்து Hear! Hear!! கேளுங்கள்! கேளுங்கள்!!]

*சுந்தரம்*— But am I to forego even bare Justice on that score of "cowerdice"? —can I dare to hope that even among you, your honour and gentlemen of the Jury there can be one who has not brought to the Judgment seat a mind imbued with preconcieved notions? In all classes of our great community, in every corner of this great city, from end to end, even to the remotest corner of this great country, has this case been already canvassed, discussed, sung and determined, and that with reference to the claims of the accused and my alleged infected body; and hence there has arisen in men's minds a prejudice in favour of the two accused, there has gone forth a wild cry for acquittal and even for a modification of the law to suit their carnal appetite! Yet I do not compain. I have before me impartial Judges. I am addressing a tribunal to which truth has seldom been a suppli cant in vain. Remember, my country men, the sanctity and the glory of our institution of marriage! Remember our Seethas, Nalayinis, Savitris Damayanthis and Anusuyas! Babylonia, Assyria, Greece, Rome, Carthage-all these Empires are no more, while their sister, India alone is alive because of her holy marital laws and family system! Those born in a foreign land and under a colder clime, even they can scarcely study the history of India without a sigh, or consider her pristine greatness and her present degradation with out a tear. But to us, Hindus, —nay, Indian's—who hold with pride the history of her early splendors recorded in the brilliant pages of her immortal writers, who remembers that she was once the mistress of the civilised world, that she was the mother of great Law-givers, states-men, and thinkers, that from her sprang Manu, Parasara, Yagnavalkya, Mithakshara, Sankara and Ramanuja whose glowing effusions of moral and ethical wisdom and patriotism still delight the learned, and whose matchless marital laws are still the admiration cf the world and models of domestic and ethical jurisprudence,—to such Indians, I say, who compares what she was with what she is and who sees her now fallen, degraded, and crushed by the domination of such foolish foriegn ideal as divorce and re-marriage, the reflection must awaken thoughts almost approaching despair and madness. Do you approve, gentlemen, you who are warm with the recollections of the sentiments inspired by the noblest lawgivers of India, do you approve of these egotists' un-Indian ideals whose object might be to sell the intellectual liberty of our land, and to strengthen the chains by which it was bound, thrust it again into the oppression it hated and shut from our country the prospect of future freedom and happiness? No, you will not! I rely on your patriotism and sense of justice. Your honour and gentlemen of the jury, I have done. [அந்தக் "கோழைத்தன" த்திற்காக, நான் நீதியையும் கூட இழக்கவேண்டுமோ?—கனம் பொருந்திய கோர்ட்டாரும், ஜூரி கனவான்களுமாகிய உங்களிலேகூட ஒருவரேனும் முந்தியே ஏற்பட்டிருக்கக் கூடிய அபிப்பிராயங்களின்றி வந்திருக்க முடியுமோ? நமது பெரும் சமூகத்தின் எல்லா வகுப்பார்களுக்குள்ளும், நமது மாபெரும் நாட்டின் மிக எட்டவுள்ள கிராமங்களிலும், இந்த வழக்கு விசாரித்து, விவாதித்து, வியந்து, நான் தொற்றுநோய் பீடித்த உடலினன் எனச் சொல்லப்படுவது கொண்டு, எதிரிக்கு சுதந்திரங்கள் உண்டு என முடிவுகட்டிவிடப் பெற்றுளது. ஆதலால், மனிதர்களின் மனத்தே, எதிரிகளுக்குச் சாதகமாக ஓர் பட்சபாத எண்ணம் உண்டாகிவிட்டது. அவர்களை விடுதலை செய்யவேண்டுமென்றும், அவர்களது காமத்திற்காகச் சட்டத்தையே மாற்றிவிடவேண்டுமென்றுங் கூட ஏகமான கூக்குரலும் கிளம்பிவிட்டது. எனினும், நான் புகார் செய்யவில்லை, எனக்கு முன்னேயிருக்கும் நீதிபதிகள் பாரபட்சமற்றவர்கள். சத்தியத்தின் பிரார்த்தனையை ஒருகாலும் வீணாகப்போய்விடச் செய்யா நீதிஸ்தலத்திற்கு நான் விண்ணப்பித்துகொள்ளுகிறேன். என் நாட்டவரே! நமது மணம் எனும் ஸம்பிரதாயத்தின் புனிதத்தையும் மகிமையையும் நினைவு கூருங்கள்! நமது சீதைகளையும், நளாயினிகளையும், ஸாவித்திரிகளையும், தமயந்திகளையும், நினைவுகூருங்கள்! பாபிலோனியா, அஸீரியா, கிரீஸ், ரோம், கார்த்தேஜ்—இந்த ஏகாதிபத்தியங்கள் யாவும் அழிந்துபோய் விட்டன; அவற்றின் சகோதரி இந்தியா மாத்திரமே, தனது புனித விவாகச் சட்டங்களினாலும் குடித்தன முறைகளாலும் இன்றும் பிழைத்திருக்கின்றது! அந்நியநாட்டிலே, குளிர்மிகுந்த தேசத்திலே பிறந்த ஜனங்களும் இந்திய சரித்திரத்தைப் படிக்கும் பொழுது பெருமூச்சுவிடாதிருக்க வல்லவரில்லை. இந்தியாவின் பூர்வீகமாண்பையும் தற்பொழுதைய வீழ்ச்சியையும் நினைக்க, அவர்களாலும் கண்ணீர் விடாதிருக்க இயலவில்லை. இந்திய சரித்திரத்தில் அழியாக் கீர்த்தி வாய்ந்த அவளது சரித்திராசிரியர்களால் ஒளி வீசும் ஏடுகளில் பதிக்கப் பெற்றுள்ள பூர்வீக மாண்பைப் பெருமையுடன் மதிப்போர் நாம்; நாகரிக உலகுக்கெல்லாம் எஜமானியாக அவள் ஒரு காலத்தில் வீற்றிருந்தாள் என்பதை நினைவுகூருவோர் நாம்; பெரும் சட்ட நிபுணர்களையும் ராஜதந்திரிகளையும் வேதாந்திகளையும் அளித்தவளென அவளை நினைவு கூருவோர் நாம்; எவரது அறிவொழுக்க ஞானமும் தேசபக்தியும் நிறைந்த பொழிந்த அறிஞரை மகிழ்விக்கின்றனவோ, எவரது மணச்சட்டங்கள் உலகமுழுவதும் வியக்கப் பெறுகின்றனவோ— குடித்தனப் பாங்குக்கும் அறநெறித் தத்துவத்திற்கும் விதி நட்பமாக விளங்குகின்றனவோ அந்த மனுவும், பராசரரும், யாஞ்ய வல்கியரும், ராமானுஜரும் தோன்றியது அவளிடத்தேதான் என நினைவு கூருவோர் நாம்—இத்தகைய இந்தியருக்கு, அவள் இருந்த விதத்தையும் இருக்கும் விதத்தையும் ஒப்பிட்டுப் பார்க்குமவருக்கு, அவள் அந்நியநாட்டின் மூடத்தனமான விவாக விலக்கு மறுமணம் ஆகிய இலட்சியங்கள் தலைதூக்கி விட்டதால் வீழ்ச்சியுற்று நசுங்கிக் கிடப்பதைக் காணுமவருக்கு, அவர் சிந்தித்துப் பார்ப்பாராயின், ஏறக்குறைய மனச்சோர்வும் பைத்தியமும் உண்டாகி விடும் என நான் கூறுகிறேன். கனவான்களே! புராதன, மிக மேன்மை பொருந்திய இந்திய ஸ்மிருதிக்காரர்களால் தூண்டப் பெற்ற உயரிய உணர்ச்சிகளை நினைவு கூர்ந்து களிப்புறும் நீங்கள், இந்தியாவுக்கு அந்நியமான, நமது நாட்டின் அறிவுச் சுதந்திரத்தை விற்றுவிட்டு அதனைத் தளைத்திருக்கும் சங்கிலிகளை வலுப்படுத்துவதையே நோக்கமாகக் கொண்ட, 'இந்த அகங்கார லட்சியங்களை அங்கீகரிக்கிறீர்களா? இல்லை; மாட்டீர்கள். உங்கள் தேசபக்தியிலும் நீதி உணர்விலும் எனக்கு நம்பிக்கையுண்டு. கனம். நீதிபதி யவர்களே! ஜூரி கனவான்களே! நான் இத்துடன் நிறுத்திக் கொள்ளுகிறேன்.] (உட்காருகிறான்.)

*ஜட்ஜ்:*— நல்லது இனிமுதலாவது எதிரி பேசவேண்டியதைப் பேசலாம்.

*சாரதா:*—இந்த வழக்காரம்பம் முதற்கொண்டே நான் வற்புறுத்திவரும் வார்த்தையை அன்றி வேறு ஒன்றும் கூறவேண்டியதில்லை எனக்கு. எந்த கவர்மென்டாருக்காவது சட்டத்திற்காவது நான் திரிகரணங்களாலும் வெறுத்திடும் ஓர் புருஷனுடன் சேரும்படி என்னை நிர்ப்பந்திக்க அதிகாரம் கிடையாது. எதிர்காலத்தில் தங்கள் பிறவிக்குக் காரணமாகிய என்னை வைதிடும் கூன் குருடு குஷ்டங்களுடைய தாயாக வேண்டுமோ யான்? அல்லது என் குற்றம் யாதிற்குமன்றி நான் வெறுத்திடும் புருஷனுடைய நெறி தவறுதலுக்காக என்றுமே எனக்குரிமையுள்ள தாய்மையை நான் தியாகம் செய்ய வேண்டுமோ? சட்டங்களும் கவர்மென்றும் இந்தியாவின் பேதைப் பெண்ணினத்தை அடிமைப்படுத்தவென்றோ, அல்லது ஆடவரின் நெறி வழுவுதலையும் விபசாரத்தையும் ஆதரிக்கவென்றோ, அல்லது இனி உற்பவிக்கப் போகும் பேதை சந்தானங்களுக்கிடையில் வியாதியைப் பரப்பிடுவதற்கென்றோ ஏற்பட்டிருக்குமாயின் இத்தகைய ஆடவ நீதிமன்றத்தில் எனக்குப் பேசவேண்டிய விஷயமேயில்லை! என்னைப் படைத்தோனை நோக்கி எனிந்தப் பெண்மையை எனக்களித்தாயென்றும் எனிந்த நாசமாய்ப் போகிற இந்தியாவிற் கொண்டு பிறப்பித்தாயென்றும் கூவி என் வயிற்றெரிச்சல் தீர அவனைச் சாபமிடுவதே என் வேலையினி! ஆ! புண்ணியவதியாகிய கன்னிமேரியாவே! நீ ஓர் தீர்க்க தரிசினியும் புனைவிய தேவதையுமாகின்றாயம்மா எனக்கு. [கண்ணீர் விட்டு விம்மியழுகிறாள்].

*கூட்டத்திலிருந்து:*—Acquit her! Acquit her, please!— அவளை விடுதலை செய்யுங்கள், அவளை விடுதலை செய்யுங்கள்.)

*ஜட்ஜ்:*—Silence, Please! வெளியாரிடமிருந்து. இத்தகைய கூச்சல் இனியும்

(௧௨-ம் பக்கம் பார்க்க)

## மலையின் பிரசவம்.

(மகாத்மா காந்தி.)

ரங்கூனில் மலை பிரசவ வேதனையுற்று, முடிவில் பரிகசிக்கத்தக்க ஓர் சுண்டெலியை ஈன்றெடுத்ததாம்! அபாயமான நோய் வாய்ப்பட்டு வருந்திக் கொண்டிருந்த சிறந்த இந்தியப்புதல்வரொருவரை, அதிகாரமிக்க அரசாங்கம், முற்றிலும் அநாவசியமான வழக்கொன்றின் சிரமத்திற்கு உட்படுத்தி, பொது மக்களின் பணத்தையும் செலவழித்து விட்டது. திரு. ஸென்குப்தா, பர்மா வழியாகச் சென்று கொண்டிருக்கையில், இரு பிரசங்கங்கள் செய்தாரென்பதே அதற்குக் கூறப்பட்ட போலிக்காரணம். அவர் பிரசங்கங்களைப் போன்ற பிரசங்கங்கள், நாடெங்கும், நாள்தோறும், ஓராயிரம் பிரசங்க மேடைகளிலிருந்து புரியப்பட்டே வருகின்றன. அவற்றை அரசாங்கத்தார் கவனிக்கவில்லை. அவரது 'ராஜத்துரோகப்' பிரசங்கத்தால் பாதிக்கப் பெற்றதாகச் சாட்சி கூறத்தக்க எவரும் பிராஸிகியூஷன் தரப்பாருக்குக் கிடைக்கவில்லை. மாஜிஸ்திரேட் தாம் கூறிய தீர்ப்பைச் சிரமத்தோடு சொல்ல வேண்டியதாயிற்று. சுதந்திர மணங் கமழு மோரிடத்திலவர் இருந்திருந்தால், சிறப்பு வாய்ந்த கைதியை விடுதலை செய்து, அவர் மீது ஓர் அற்பமான புகாரைக் கொணர்ந்ததற்காக அரசாங்கத்தையும் கண்டித்திருப்பார்.

திரு. ஸென்குப்தா மீது வழக்குத் தொடரப்பட்டு விட்டதால், அவருக்கொன்றும் தீமை யேற்பட்டுவிடவில்லை. பொதுஜனங்களுக்கு அவரிடமிருந்த மதிப்பை, அது இன்னும் உயர்த்திவிட்டது. எதிர்வாதம் செய்யவோ எந்தக் கேள்விக்கும் பதிலுரைக்கவோ அவர் உறுதியாக மறுத்து விட்டார். எந்தத் தைரியத்திற்கு அவர் பிரசித்தமடைந் திருந்தாரோ அந்தத் தைரியத்துக்கு இவ்வாறு மறுத்தது இன்னுமோர் நிரூபணமுமாயிற்று.

ஆனால், அந்தத் தீர்ப்புக்கு இன்னும் ஆழ்ந்ததோர் பொருளுமுண்டு. சர்தார் வல்லபாய் மீது சாற்றப்பட்ட குற்றத்திற்கு உண்மையிலேயே அவர் உரியவரானால் இன்னும் கடுமையானதோர் தண்டனை அவருக்குத் தகுந்ததாகும்; திரு. சென் குப்தா ராஜத்ரோகக் குற்றவாளியானால், அவருக்கு வெறும் பத்து நாள் காவல் தண்டனையல்ல, பிறருக்கு உதாரணமாக விளங்கத் தக்கதோர் பெருந்தண்டனை விதித்திருக்க வேண்டும். ராஜ விசுவாசமின்மை ஓர் குற்றமாக விருந்து அதுபற்றிய தண்டனைச் சட்டப்பிரிவு உண்மைகொண்டதாயுமிருந்தால், ராஜத்துரோகத்தையே ஓர் மதமெனக் கொண்ட நான் வெகு நாட்களுக்கு முன்னரே விசாரிக்கப்பட்டு, பலமாகத் தண்டிக்கப் பட்டிருக்க வேண்டும்.

இலேசான தண்டனைகளே யளிக்கப்படுகின்றன வென்றோ, எந்த அச்சத்தாலோ அரசாங்கம் என்னை ஒன்றும் செய்யாது விட்டிருக்கிறதென்றோ எவரும் கருதிவிட வேண்டாம். உண்மையான காரணம் ஆழ்ந்தது; அது அரசாங்கத்துக்குக் கௌரவமளிப்பதென்றுகூடச் சொல்லலாம். தாங்கள் கொள்ளும் அபிப்பிராயங்களைப் பகிரங்கமாக வெளியிடும் ஜனங்களைத் தண்டிக்க, அரசாங்கத்தார் வெட்கப் படுகிறார்கள். தாங்கள் அவ்வாறு செய்தால் உலகத்தின் அபிப்பிராயம் தங்களுக்கு விரோதமாக எழுந்துவிடக் கூடுமென்பதை அவர்கள் உணர்ந்

(நான்காம் பத்தி பார்க்க)

## செட்டிமார்நாட்டு
## சத்தியாக்கிரகத் தொண்டர் படை.

ஓர் வேண்டுகோள்.

திருநெல்வேலி தேசபக்தர் திரு. பொ. திருகூடசுந்தரன், (எம். ஏ; பி. எல்.) அவர்கள் அமராவதிபுதூரிலிருந்து பின்வரும் வேண்டுகோளை அனுப்பியுள்ளார்கள்:—

சகோதர சகோதரிகளே!

ஆங்கில அரசாட்சியின் கீழ் இந்தியர் அடிமைக் குழியில் வீழ்ந்து அலமருகின்றனர். அதன் பயனாய் வறுமை நாளுக்குநாள் வளர்ந்து வருகின்றது. இந்த நாட்டைப்போல் எளிய தேசம் எங்கும் கிடையாது. இத்தகைய இழி நிலைமையை மாற்ற சுயேச்சை தேவை. அதை அடைய சத்யாக்கிரகச் சட்டமறுப்பே தனி வழி.

அவ்வழியை அனுஷ்டித்து நமக்கு நலம் காண மகாத்மா காந்தியடிகள் முனைந்து நிற்கின்றார். முதலிலே உப்பு வரிச்சட்டத்தை மீற யோசனை கூறுகின்றார். அதை மீறத் தாமும் தமது ஆசிரமத்தாரும் தயாராகிக் கொண்டு வருகின்றனர். இன்னும் சில நாளில் ஆரம்பித்து விடுவார்.

அப்பொழுது நாடெங்கும் சட்டமறுப்புத் துவக்கவேண்டும் என்பது அவருடைய அபிப்பிராயம். அவர் விரும்பும் வண்ணம் செய்ய எல்லா மாகாணங்களும் ஏற்பாடு செய்து வருகின்றன. அவர்களைப் போல் தமிழ் நாட்டாரும் செய்ய வேண்டாமா?

தமிழ் நாட்டிலும் சட்டமறுப்பு ஆரம்பிக்க ஸ்ரீமான் சக்ரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் அவர்கள் வேண்டிய வேலைகளைச் செய்திருக்கிறார். செட்டிநாட்டு ஜனங்களும் அவருடன் உழைக்க வேண்டியது அத்தியாவசியம்.

ஜனங்கள் இரண்டு உதவி செய்யலாம். சட்டமறுப்புச் செய்யத் தொண்டராய்ச் சேரலாம். சட்டமறுப்புச் செய்வோருக்குப் பணவுதவி தரலாம். இவ்விரண்டு உதவியும் செய்ய விரும்புவோர் எனக்கு அனுப்பும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

எந்த முன்னேற்ற விஷயத்திலும் செட்டிநாட்டு வாலிபர் முன்னணியில் நிற்பர் என்பது யாவரும் அறிந்த விஷயம். காந்தியடிகளின் கதர் இயக்கத்தைத் தமிழ் நாட்டில் அதிகமாக ஆதரிப்பவர் செட்டிநாட்டு இளைஞரே. அதனால் இப்பகுதியில் ஏராளமான தொண்டர்கள் சேர்வார்கள் என்று எதிர் பார்க்கிறேன்.

இதர தர்ம காரியங்களுக்குப் பணவுதவி செய்வதைவிட அதிகமாக எல்லாத் தர்ம காரியங்களுக்கும் அஸ்திவாரமான சுயராஜ்ய ஸ்தாபனத்திற்கு அளித்தல் அவசியம் என்பதை நீங்கள் நன்கு உணர்வீர்கள். தயவு செய்து ஆண் பெண் அனைவரும் தாராளமாகத் தனம் அனுப்பி வைக்க வேண்டுகிறேன். உடனே ஊர்தோறும் பணம் வசூல் செய்யக் கமிட்டிகள் ஏற்படுத்த வேண்டிய ஏற்பாடு செய்யுங்கள்.

வந்தேமாதரம்!

குறிப்பு:—தொண்டராய்ப் பதிவு செய்துகொள்ளவும் பணம் அனுப்பவும் கூடிய இடங்கள்:—

(க) "ஊழியன்" காரைக்குடி
(உ) பொ. திருகூடசுந்தரம்
அமராவதிபுதூர், காரைக்குடி.

## தமிழ்நாட்டு முயற்சி.

தமிழ்நாட்டு சத்தியாக்கிரகத் தலைவர் திரு. சக்கிரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் பின்வரும் வேண்டுகோளை அனுப்பியிருக்கிறார்:—

மகாத்மாஜியைச் சிறைப்படுத்தவா வேண்டாமா என்று அரசாங்கத்தார் இன்னும் யோசித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த அவகாசத்தை நாம் செவ்வனே பயன் படுத்திக் கொள்ளுவது கடமையாகும். சீக்கிரத்தில் அதாவது ஏப்ரல்-மீ ரு-உ தலைவர் கடற்கரை சேருவார். மறுநாள் உப்புச் சட்டத்தை மீறுவார். தேசத்தில் அனைவரும் சாத்வீகப் போரில் சேருமாறு கட்டளையிடுவார்.

தமிழ் நாட்டிலும் ஏராளமான வீரர்கள் போரில் சேர ஆயத்தமாயிருக்கிறார்கள். அவர்களைத் திரட்டிப் போருக்கு அனுப்பவேண்டிய சௌகரியங்கள் செய்து கொடுப்பது மகா ஜனங்களின் கடமையாகும். இதற்காக உடனே சத்தியாக்கிரகச் சாவடிகள் ஆங்காங்கு அமைக்க வேண்டும். போர் முனையில் வேண்டிய சகல சௌகரியங்களும் தயார் செய்து கொள்ள வேண்டும்.

சிறை செல்லும் தொண்டர்களின் குடும்பத்தைக் காப்பாற்றும் கடமையை நாம் எடுத்துக் கொள்ளாவிடினும், போரைச் சரியாக நடத்தப் பணம் வேண்டும். பணம் திரட்டுவதற்காக இப்போது சுற்றித்திரிய முடியாது. ஆகையால் தேசபக்தர்கள் அனைவரும் தாங்களாகவே ஆங்காங்கு முயற்சியெடுத்து நண்பர்களைத் தூண்டி அடியிற்கண்ட விலாசத்திற்கு நன்கொடைகளை அனுப்பக் கோருகிறேன். தேசத்தில் நடைபெறும் போரில் நாம் வெற்றியடைந்தால் எக் கட்சியினருக்கும் நன்மையே; நஷ்டம் இல்லையென்பது உறுதி. எக்காரணத்தினாலாவது தோல்வியடைந்தால் அனைவருக்கும் தீங்கேயாகும். மனதில் உறுதியும் செயலில் ஆண்மையும் கொண்டு போரில் இறங்கும் தியாகிகளுக்கு இச்சமயம் உதவி புரிவது அனைவருடையவும் கடமையாகும். தமிழரின் நல்ல புகழைக் காப்பாற்ற அனைவரும் உடனே முன் வரவேண்டும்.

உப்புச் சட்டத்தை மீறி ஒரு பெரிய அநியாயத்தை ஒழிப்பதற் காகவும், ஆங்கில ஆட்சியின் சக்தியை எதிர்த்து அடிமை மாயத்தை நீர்த்துக்கொள்ளுவதற்காகவும் இந்தச் சட்டமறுப்பு இயக்கத்தை மகாத்மா ஆரம்பித்திருக்கிறார். உப்புச் சட்டத்தை எதிர்க்கத் தென்னாட்டில் எவ்விடத்தில் போர் தொடங்கலாம் என்பதை நிச்சயித்திருக்கிறோம். போர் தொடங்கியபின் காரியங்கள் எவ்விதம் நடைபெறுகின்றன என்பதைப் பார்த்து, பின்னும் இடம், முறை, முதலியவைகளை அவ்வப்போது மாற்றி நடத்தலாம். ஒற்றுமை, கட்டுப்பாடு, தைரியம், ஊக்கம், முயற்சி, வீரம் இவைகள் இருக்கும் வரையில் வெற்றியைப் பற்றி ஐயமில்லை.

ஏப்ரல் மாதம் தேசிய வாரத்தில் போருக்கு வேண்டிய திரவியமும் ஆளும் சேர்க்கத் தீவிரமுயற்சி எடுக்க வேண்டும். எல்லா ஊர்களிலும் தலைவர்கள் இந்தவேலையைக் கவனிக்குமாறு தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன். தொகைகளை அடியிற் கண்ட விலாசங்களில் எதற்காவது அனுப்பலாம். ஏப்ரல் மீ ௧௨-உ க்குள் எவ்வளவு சேர்க்க முடியுமோ அவ்வளவு சேர்த்து அனுப்புமாறு வேண்டிக் கொள்ளுகிறேன்:—

டாக்டர் ராஜன், திருச்சிராப்பள்ளி.
ஏ. வைத்தியநாதய்யர், சந்தைப் பேட்டை மதுரை.
கே. பாஷ்யம், மைலாப்பூர், சென்னை.
திரு. வி. கல்யாணசுந்தர முதலியார், நவசக்தி, ராயபேட்டை, சென்னை.

தமிழ்நாட்டின் சரித்திரத்தில் இது ஒரு மகத்தான சோதனைக்காலமாகும். கடவுள் துணைசெய்க!

## மலையின் பிரசவம்.

(முதல்பத்தித் தொடர்ச்சி)

திருக்கிறார்கள். திரு. சென்குப்தாவின் சொற்பொழிவில் பலாத்காரத்திற்குத் தூண்டிவிடக் கூடிய அம்சம்யாதும் இல்லையாதலால், ராஜத்ரோகக்குற்றத்திற்குத் தகுந்த தண்டனையாதவும் அளிக்கக் கூடிய காரணமெதுவும் தாம் காணவில்லையெனக் கூறவேண்டிய நிர்ப்பந்தம் ரங்கூன் மாஜிஸ்திரேட்டுக்கு ஏற்பட்டது. கடைசி பிரிவைத் தயாரித்தவர்கள், பலாத்காரக் குறியொன்றும் தன்னிடமில்லாத வொருவன் ராஜத் துரோகத்துக்கு ஆதாவளிக்கக் கூடுமென, அநேகமாகக் கருதியிருக்கவேமாட்டார்கள். பலாத்காரமில்லாதவிடத்து, விருப்பின்றியே இவ்வாறு தண்டனை விதிக்க வழக்குத் தொடரக்கூட அரசாங்கம் சக்தியில்லாமலு மிருக்கிறது— அஹிம்சைக்கு இதுவே உண்மையான ஓர் புகழ்மாலையாகும். இதுவரையிலும் பலாத்காரத்தால் மாசுபடாத இவ்வியக்கம், இவ்வாறே தன் நல்லியல்பைப் பாதுகாத்துக் கொண்டிருக்குமானால், மிகச் சமீபத்திலேயே வெற்றிகிடைப்பது நிச்சயம் என்பதை எவருமே தெளிவாய்க் காணலாம். உப்புவரி ஒழிவது மாத்திரமல்ல; சுயராஜ்யத்தை நோக்கி நாம் அடையக்கூடிய முன்னேற்றத்திற்கிடையூறாயுள்ள பிறகஷ்டங்களும், அஹிம்சையென்ற தூய ஆயுதத்தின் முன் புகையென மறைந்தொழிந்துவிடும்.

—"இளம் இந்தியா."

# காரைக்குடி நகர சபை.

திரு. மு. ராம. பெரி. பேரில் நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது.

கௌன்சிலில் போலீசுக் காவல்.

(நமது நிருபரிடமிருந்து)

காரைக்குடி முனிசிபல் கௌன்சிலின் சாதாரணக் கூட்டம் சென்ற செவ்வாய்க் கிழமை மாலை ரு மணிக்கு தலைவர் ராவ்பகதூர் ஆவி பழ சிதம்பரம் செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. அத்தருணம் போலீசு சப்இன்ஸ்பெக்டரும், கான்ஸ்டபிள்கள் சிலரும் கௌன்சில் ஹாலில் பந்தோபஸ்துக்காக வந்திருந்தார்கள். கூட்ட நடவடிக்கையைக் காண ஏராளமான ஆட்கள், விசிட்டர் காலரியில் காணப்பட்டார்கள். கரு அங்கத்தினர்கள் விஜயஞ் செய்திருந்தனர். நடைபெற்ற நிகழ்ச்சிகளில் முக்கியமானவை வருமாறு:—

## அனுதாபத் தீர்மானம்

மாஜி கௌன்சிலர்களான திரு வெ. ராம லெ. ராமசாமி செட்டியார், திரு மெ செ சொக்கலிங்கம் செட்டியார் ஆகிய இருவர் மரணத்திற்கு அனுதாபப் படுவதாக ஓர் தீர்மானம் திரு. சி. மு. அரு. முத்துராமன் செட்டியாரவர்களால் கொண்டுவரப்பட்டு திரு. சித. நா. ராம. நாராயணன் செட்டியார் அவர்கள் ஆதரிக்கவே ஏகமனதாக நிறைவேறியது.

## அசேஸ்மேண்டு லிஸ்டு.

சபீ. ந. மு. இபுராகிம் ராவுத்தர்

தொழில்வரி சம்பந்த அசெஸ்மெண்டு லிஸ்டுகள் முன்னர் வார்டு மெம்பருக்கு அனுப்பப்பட்டிருக்க ககங௦-வதுவருடத்தில் அவ்வாறு அனுப்பப்படாத காரணமென்னவென்று கேட்ட கேள்விக்கு பதில் அனுப்ப வேண்டிய அவசியமில்லை. தேவையானல் சமயோசிதம் போல் அனுப்பப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

வேறு இருகேள்விகள் திரு. சபீ. ந. மு. அவர்களால் கேட்கப்பட்டன. அவை அனுமதிக்கப்படவில்லை.

அ. மு. க.:—அந்தக் கேள்விகள் யாவை?

தலைவர்:—கேட்டவருக்கு பதில் கூறியாச்சு.

அ. மு. க:—நீங்கள் அதற்குப்பதில் சொல்வதே முறை.

தலைவர்:—நோட்டீசு கொடுங்கள். பதில் சொல்லுகிறேன்.

## தண்ணீர்வசதித் திட்டம்.

சபீ. ந. மு. கேள்வி:— காரைக்குடி தண்ணீர் திட்டம் எந்தநிலைமையில் இருக்கிறது? அதுசீக்கிரம் நடைபெற என்னென்னவிடப்ஸ் எடுத்துக்கொள்ளப்பட்டன? இனி என்னென்ன எடுக்கவேண்டியதிருக்கிறது?

பதில்:— சானிட்டரி எஞ்சினியரைக் கொண்டு சம்பை ஊத்தில் கிணறுவெட்டினோம். மழைகாலத்தில் அதைப்பரிசோதனை செய்யமுடியவில்லை. கோடைகாலத்தில் தக்க ஏற்பாடு செய்து முடிவுசெய்யப்படும்.

## பொது கக்கூசுகள்.

சபீ. ந. மு. கேள்வி:—நமது முனிசிப்பாலிட்டியில் எத்தனை பப்ளிக் (பொது) கக்கூசுகளும் சொந்தவீடுகளில் கக்கூசுகளும் இருக்கின்றன? போன வருஷ அட்மினிஸ்டிரேஷன் ரிப்போர்ட் (நிர்வாக அறிக்கை) பேரில் கவர்ன்மெண்டார்சொல்லியபடி பப்ளிக் கக்கூசுகள் அதிகம் எத்தனை ஏற்பட்டிருக்கிறது? நாளதுவருஷம் ஏப்ரல் மாதத்திலிருந்து எத்தனை ப்ரைவேட் லட்ரின்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன?

பதில்:— பப்ளிக் கக்கூசுகள் ஏறும், வீடுகளில் சொந்த கக்கூசுகள் சுமார் எ௦-ம் இருக்கின்றன. இதுவிஷயமாக முத்துப்பட்டிணத்தில் ஏற்படுத்த கவன்மெண்டுடன் சடிதப் போக்குவரவு நடக்கிறது. இன்னும் உள கக்கூசுகள் அதிகம் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

## திரு. குருசாமியின் கேள்வி.

ககஉக பிப்ரவரி க-உ-கூடிய முனிசிபல் மீட்டிங்கில் ஒவ்வொரு மாதத்தின் கடைசி செவ்வாய்க்கிழமையில் முனிசிபல்சபை கூட்டப்பட வேண்டுமென்று தீர்மானம் நிறைவேறி யிருக்க, கடந்த பிப்ரவரி உருஉ யாகிய கடைசி செவ்வாயன்று கூட்டப்படாத காரணமென்ன?

பதில்:— குறிப்பிட்ட தேதியில் மீட்டிங்கே நடைபெறவில்லை.

மு, ராம, பெரி:—ஒவ்வொரு மாதக் கடைசி செவ்வாய்க்கிழமை மீட்டிங்கை நடத்துவது என்று எந்த கூட்டத்திலாவது தீர்மானம் ஆகியிருக்கிறதா?

தலைவர்:—கேள்வி அவ்வாறு கேட்கப் படவில்லை.

மு, ராம, பெரி:—நான் அப்படி இப்போது கேள்க்கிறேன்? பதில் சொல்லுங்கள்,

தலைவர்:—நோட்டீசு கொடுக்க வேண்டும்.

ராவ்பகதூர் மரு, சு:—ககஉக-வய ஙO எனத் திருத்துவதானுலும், அடுத்த மாதமாகிய மார்ச்சிலிருந்தே அந்தத் தீர்மானம் அமுலுக்கு வரவேண்டும். ஆதலால் பெப்ரவரி கடைசி செவ்வாய்க்கிழமை கூட்டம் நடத்த வேண்டுவது கட்டாயமில்லையே.

## மரகதவல்லியார் வாசஸ்தலம்.

ராவ்பகதூர் சு, அ, சு, ராம:—கேள்வி:— நமது காரைக்குடி முனிசிப்பல் கௌன்சிலர்களில் ஒருவரான ஸ்ரீமதி மரகதவல்லியம்மாள் காரைக்குடி முனிசிபல் எல்லையிலாவது அதன் இரண்டு மைல்களுக்குள்ளாவது வசிக்கவில்லை என்பதைத் தலைவர் அவர்கள் அறிவார்களா?

பதில்:—எனக்குத் தெரிந்த மட்டில் வசிக்கவில்லை.

கேள்வி:—ஸ்ரீமதி மரகதவல்லியம்மாள் காரைக்குடிக்கு ௬-மைல் களுக்கப்பாலுள்ள அமராவதிபுதூரில் வசிக்கிறார்கள் என்பதைத் தலைவர் அவர்கள் அறிவார்களா?

பதில்:—அமராவதிபுதூரில் வசிப்பது நான் அறிவேன். ஆனல் இங்கிருந்து அமராவதிபுதூர் எவ்வளவு தூரம் என்று என்னல் நிர்ணயிக்க முடியாது,

கேள்வி:—ஷை அம்மாள் அவ்விதம் அமராவதிபுதூரில் வசித்து காரைக்குடி முனிசிபல் ஸ்தானம் வகிப்பது ௫௦-வது செக்ஷன் க-(எச்) பிரிவின்படி சட்ட விரோதமல்லவா?

பதில்:—இது விஷயமாக நான் அபிப்பிராயம் சொல்லத் தயாராகவில்லை,

கேள்வி:—ஷை அம்மாள் பெயர் காரைக்குடி ஓட்டர் லிஸ்டில் இருக்கிறதா?

பதில்:—இல்லை.

## திரு பெரியணன் செட்டியாரின் நடத்தை,

ராவ்பகதூர் சு, அ, சு, ராம, கேள்வி:— (ஏ) ச-ங-கO-உ நடந்த மீட்டிங்கில் கவுன்சிலர் மகா-ா-ா-ஸ்ரீ மு, ராம, பெரியணன் செட்டியார் அவர்கள் கோர்ட்டையம் கவுன்சிலையும் கவர்ன்மெண்டையும் தாக்கிப் பேசினதற்கு சேர்மனவர்கள் ஏதாவது நடபடிக்கை எடுத்துக் கொண்டார்களா?

பதில்:—ஆம்.

கேள்வி:—(பீ) நடபடிக்கை எடுத்துக் கொண்டால் என்ன நடபடிக்கை எடுத்துக் கொள்ளப் பட்டது?

பதில்:—தற்பொழுது தெரிவிக்க முடியாது.

கேள்வி:—(சி) நடவடிக்கை எடுத்துக் கொள்ளாவிட்டால் ஏன் எடுத்துக் கொள்ளவில்லை?

பதில்:—கேள்விக்கு இடமில்லை,

கேள்வி:—மகா-ா-ா-ஸ்ரீ மு, ராம, பெரியணன் செட்டியாரவர்கள் தன்னுடைய அன்றைய நடத்தைக்கு வருந்தி மன்னிப்புக் கேட்டுக்கொண்டிருக்கிறார்களா?

பதில்:—இல்லை

## மோட்டார் லாரி.

ராவ்பகதூர் சு, அ, சு, ராம:— தெருக்களில் தண்ணீர் தெளிப்பதற்கு ஒரு மோட்டார் லாரி வாங்கும்படி கவுன்சிலில் சாங்ஷன் செய்யப்பட்டு ஒருமாதத்திற்கு மேலாகியும் ஏன் இதுவரை மோட்டார் லாரி வாங்கவில்லை?

பதில்:—வாங்க வேண்டிய விஷயம் இன்னும் முடிவு பெறவில்லை,

கேள்வி:—ஷை லாரி இல்லாததினுல் வெயிலில் ஜனங்களுக்கு கஷ்டமாகவிருப்பதோடு ரோட்டுப் போடுவதற்கு ஆடங்கப்படுவதையும் சேர்மன் அவர்கள் அறிவார்களா?

பதில்:—ஆம்.

கேள்வி:—இடைஞ்சல்களை நிவர்த்திக்கும் பொருட்டு இனியும் தாமதிக்காமல் மோட்டார் லாரி வாங்க சேர்மனவர்கள் ஏற்பாடு செய்வார்களா?

பதில்:—முயற்சிக்கிறோம்,

## கல்லுக்கட்டி ஊருணிக் கால்வாய்.

கல்லுக்கட்டி ஊருணிக்கு தண்ணீர்வரும் மடை ஆபாசப் படுத்தப் படுவதால், கூ-அடி அகலம் கரு௦-அடி நீளத்தில் ஓர்கான் கட்டி தண்ணீர் செல்ல வசதி யளித்து, பாக்கியை ஜாகைக்காக உயர்த்த வேண்டுமென்றும் அதற்காக எஸ்டிமேட் தயார் செய்ய வேண்டும் என்றும் திரு. ச. பி.ந. மு. இபுராகிம் ராவுத்தர் ஓர் பிரேரணை கொண்டுவந்தார். இதனை திரு. மு. ராம. பெரியணன் செட்டியார் ஆமோதித்தார்.

தலைவர்:—இதில் சில இடங்கள் தகராறில் இருக்கின்றன. சில ராஜினமாச் செய்யப் பட்டிருக்கின்றன. இனி ராஜிநாமாச்செய்ய வேண்டியது கொஞ்சம் இடம் தான். அதையும் முடித்து எல்லாம் சேர்த்து ஒரே வாய்க்காலாகக் கட்டிவிடலாம், என்று கூறினர்.

இதுபற்றிய சில விவாதத்தின் பிறகு கால்வாய் கட்டுவது அவசியம் என முடிவு செய்யப் பட்டது.

## திரு. முத்துராமன் செட்டியார் பிரேரணைகள்.

திரு. சி. மு. அரு. முத்துராமன் செட்டியாரவர்கள கீழ்க்கண்ட பிரேரணைகள் கொண்டுவந்தார்.

(க) செக்காலை பாதையில் அருணசல ஆசாரியார் வீட்டிற்கு முன்னதாக ஓர் கிணறு வெட்டுவது பற்றியது.

இக்கிணறு வெட்டும் இடத்தை முடிவு செய்ய ராவ்பகதூர் மரு. சுப்பையா செட்டியார், சி. மு. அரு. முத்துராமன் செட்டியார் ஆகிய இருவர் அடங்கிய ஓர் கமிட்டி ஏற்படுத்தப்பட்டது.

(உ) கல்லுக்கட்டி தண்ணீர் புரளி செக்காலை ரோடு அருகாமை முதலிய இடங்களிலுள்ள கத்தாளைகளை அப்புறப்படுத்தல் தீர்மானம் நிறைவேறியது.

(ங) முரு. லெ. நா. விட்டுக்குமுன்னுள்ள பாலத்தை அகலப் படுத்தவும் உயர்த்தவும் வேண்டும் என்பது.

கூடியவிரைவில் நிறைவேற்றுவது என முடிவுசெய்யப்பட்டது.

## மோட்டார் விதிகள்.

வாடகை யோட்டார் பஸ்காரர்கள் அனுசரிக்கவேண்டிய பழய யூனியன் விதிகளோடு, ஜனங்களை மோட்டார் நிலயத்திலேயே ஏற்றவேண்டுமென்றும், நகர எல்லைகுள் மணி ஒன்றுக்கு எட்டு மைல் ஸ்பீடுக்கு மேல் ஓட்டக்கூடாதென்றும் சேர்க்கப்பட்டது.

## தேவகோட்டை கார்ஸ்டாண்ட.

தேவகோட்டை பக்கம் செல்லும் கார் ஸ்டாண்டை மாற்றியிருப்பதால் தங்கட்கு நஷ்டமும் கஷ்டமும் ஏற்படுமென்ற மோட்டார் சொந்தக்காரர் மனு ஆலோசனைக்கு வந்தபோது,

அ ராம நா சித நாராயணன் செட்டியார்:—மறு ஏலம் போடலாம்.

அ மு க மு:—ஏலம் போட்டபிறகு மறு ஏலம் எப்படிப் போடலாம்?

தலைவர்:—தகராறுஏற்பட்டால் மறுஏலம் போடலாம்.

ச பீ ந மு:—கார் ஸ்டாண்டு ஏல விஷயம் அப்ருவலுக்கு வந்தபோது, தேவகோட்டை போகும் கார்ஸ்டாண்டு மாற்றப்பட்டிருக்கும் விஷயம் சொல்லப்படவில்லையே?

ராவ்பகதூர் மரு சு:—ஏலம் போடும் போது சேர்மனவர்கள் வியக்தமாகத் தெரிவித்தார்கள். அவ்வளவு விபரமும் சொல்லித்தான் இருக்கிறார்கள்.

ச பீ ந மு:—சாங்ஷனுக்கு வந்த அன்று சொல்லப்படவில்லை.

மு ராம பெரி:—ஏலத்தை கான்சல் (ரத்து செய்வதில்) ஆட்சேபமில்லை. சர்சார்ஜ் வருமா என்று பார்த்துக்கொள்ள வேண்டும்.

ராவ்பகதூர் மரு சு:—சர் சார்ஜுக்கு இடமில்லை, இந்தத் தொகைக்குக் கேட்க ஆள் இருக்கிறது.

மு ராம பெரி:—சர்சார்ஜ்வருமா வராதா என்று சேர்மனவர்களிடம் கேட்கிறேன்.

தலைவர்:—அதை நீங்களே ஆலோசித்துக் கொள்ளுங்கள். சர்சார்ஜ் வரும் வராது என்பதை என்னல் சொல்ல முடியாது.

மரு சு:—சர்சார்ஜ் வரும் வராது என்றால் அதன்படி செய்யலாம்.

தலைவர்:—மனுவை என்ன செய்வது என்பதைத் தீர்மானியுங்கள்.

சி மு அரு மு:—வக்கீலைக் கேட்பது. (இதுபற்றிய வாதங்கள் நீண்டநேரம் நடந்துகொண்டே யிருந்தது அப்போது)

தலைவர்:—சர்சார்ஜைப்பற்றி பேச்சில்லை. மனுவைத் தள்ளுவதா, மறு ஏலம் போடுவதா?

என் எஸ் வெ:—ஜனங்களுக்கு சௌகரியமா இல்லையா என்பதை அறிந்து அதற்குத் தகுந்தபடி செய்யவேண்டும், ஆதலால் ஜனங்களுக்கு சௌகரியமாக விருக்கிறதென்பதற்கு தீர்மானம் நிறைவேற்றலாம்.

தலைவர்:—ஜனங்களுக்கு சௌகரியமாக விருப்பதால் மறு ஏலம் போடலாம். எக்ரிமெண்டு இன்னும் எழுதவில்லை.

மரு, சு:—குத்தகைப் பணம்?

தலைவர்:—வாங்கிஇருக்கிறது,

மு, ராம:—சமாதானம் செய்துவிடலாம்,

மரு, சு:—யாருக்கும் யாருக்கும் சமாதானம்?

வா இஷ்டமுள்ளவர்கள் வரவேண்டியது தான்?

தலைவர்,—சாமாதானம் பண்ணுவது ஒத்துக்கொண்டால் நல்லதுதான், யார் சமாதானம் செய்வது?

மு, ராம:—சேர்மன் ஒப்புக் கொள்ளுவதானல் நானும் ஓர் மெம்பராக விருக்க ஒப்புக்கொள்ளுகிறேன்,

தலைவர்:—என்னல் இருக்க முடியாது, வேறுயாரையாவது ஏற்படுத்துங்கள்,

(சமாதானம் செய்ய கமிட்டி ஏற்படுத்துவது என்ற விஷயத்தில் எவரும் ஒத்துக் கொள்ளவில்லை)

பின்னர் ஜனங்கள் சௌகரியத்தை உத்தேசித்து மறு ஏலம் போடுவது என்ற விஷயம் தலைவரால் ஓட்டுக்கு விடப்பட்டது,

மு, ராம:—'இதில் நான் கலந்துகொள்ளவில்லை' என்றுகூறி ஹாலுக்கு வெளியே போயிவிட்டார்,

தீர்மானத்திற்கு சாதகமாக (க) ராவ்பகதூர் ராமனுதன் செட்டியார் (உ) அ, ராம, நா, சித நாராயணஞ் செட்டியார் (ங) ச.பி ந, மு, இபுராகிம் ராவுத்தர் (ச) என், எஸ், வெங்கிட்டராமையர் (ரு) முத்து குப, மு, முருகப்ப செட்டியார் ஆகிய ஐவரும் ஓட்டு கொடுத்தார்கள், பாக்கி ஆறு அங்கத்தினர்களும் நடுநிலைமை வகித்தார்கள், எதிரிடையாக எவரும் ஓட்டுக் கொடுக்கவில்லை. எனவே தீர்மானம் நிறைவேறியது, இவ்விஷயம் முடிவானதும் திரு, பெரியணன் செட்டியார் கௌன்சிலுக்கு வந்துவிட்டார்,

## டோல்கேட் காண்டிராக்ஷன்.

டோல்கேட் காண்டிராக்ஷன் விஷயமாகவுள்ள அபிப்பிராய மாறுபாட்டை ஜில்லாபோர்டு பிரதிநிதிகளோடு கலந்து முடிவுசெய்ய முனிசிபாலிடி சார்பாக, என், எஸ், வெங்கிடராமையர் சி, மு, அரு, முத்துராமன் செட்டியார் சேர்மன் ஆகிய மூவர் அடங்கிய கமிட்

(தொடர்ச்சி எ-ம் பக்கம்)





## காரைக்குடி நகரசபை.

( முன் பக்கத் தொடர்ச்சி. )

டியை ஏற்படுத்துவதென ராவ்பகதூர் மரு, சுப்பையா செட்டியார் பிரரேபித்தார், இதனை ராவ்பகதூர் ராமநாதன் செட்டியார் ஆமோதிக்கவே ஏகமனதாக நிறைவேறியது,

இத்தருணம் ராவ்பகதூர் மரு, சுப்பையாசெட்டியாரவர்களும் மு, ராம, பெரியணன் செட்டியாரவர்களும் சேர்மனவர்களிடம் போவதாகச் சொல்லிவிட்டு சென்றார்கள், பின்னர் வேறு சில மெம்பர்களும் போனர்கள் ஆறு அங்கத்தினர்கள் இருந்தார்கள்,

## டோல்கேட் அகற்ற.

டோல்கேட்டை அகற்றி அதற்குப் பதிலாக ஓர் புரொவின்ஷியல் வரி விதிப்பதற்காகக் கொண்டு வரப்பட்ட மசோதாவை ஆதரிப்பதென முடிவு செய்யப் பட்டது,

## பெண்கள் வைத்தியசாலை.

பெண்கள் குழந்தைகள் ஆசுபத்திரி ஏற்படுத்த ஓர் தகுதி வாய்ந்த இடத்தை முடிவு செய்ய ஸ்ரீமதி மரகதவல்லியம்மாளுக்கு உரிமை யளித்திருந்தது. அதுபற்றி ஏதுவும் செய்யப் படாததால், மேல் செய்ய வேண்டும் விஷயம் ஆலோசனைக்கு வந்த பொழுது,

தலைவர்:— மூன்று ரிமைண்டர்கள் விட்டோம், இப்போது முடியாது என அறிவித்துவிட்டார்கள், ஆதலால் கட்டிட விஷயம் தற்போது ஆலோசித்து முடிவு செய்ய வேண்டும்,

சேர்மன் அவர்களும் திரு நா, கு, ராமநாதன் செட்டியாரவர்களும் கட்டிட விஷயம் பார்த்து முடிவு செய்வதென நிச்சயிக்கப்பட்டது,

## மோட்டார் லாரி.

எ௦௦௦ ரூ விலையில் ஓர் மோரிஸ் செவிஸ் வாங்குவதென முடிவு செய்யப்பட்டது,

## எஸ்டிமேட்டுகள்.

| | |
|---|---|
| செக்காலை மேலத் தெருவை வடக்குக் கோடியில் ரோட்டுவரை நீளப்படுத்த இடம் அக்வயர்செய்ய | ரூ உச௦௦ |
| (A) வீரியன் கண்மாய் வாய்க்காலுக்கு பாலங்கட்ட | ரூ கரு௫௦ |
| ஷை சம்பந்தமாய் தெருக்களுக்குத் தென்புறத்தில் விமண்டு கான்கிரீட் சைட்ரிவர்ட் மேடை கட்ட | ரூ க௦௫௦ |
| (B) ஷைசம்பந்தமாய் தெருக்களுக்குத் தென்புறத்தில் விமாண்டு கான்கிரீட் சைட்ரிவர்ட் மென்ட் கட்ட | ரூ க௦௬௦ |
| கஅ-நிம்பர் கழனிவாசல் செக்காலை ரோட்டுக்கு ஸ்பெஷல் மெயின்டினன்ஸ் | ரூ உகஎடு |
| சகூ-நிம்பர் ரோட்டில் உ!௦ பர்லாங்குக்கும் க!கூ பர்லாங்குக்கும் இடையில் ரியின்போர் ஸெமன்டு கான்கிரீட் போட | ரூ கூ௫௦ |
| உ௦-நிம்பர் ரோட்டுக்கு ஸ்பெஷல் மெயின்டினன்ஸ் | ரூ கூ௫௦ |
| ரப்பிஷ் அண்டு நைட்ஸாயில் டிப்போவுக்கு நிலம் அக்வயர்பண்ண | க௦௦௦௦ |
| சிவன்கோயில் தெருவிலிருந்து ரெயில்வே ஸ்டேஷனுக்குள்ள வண்டிப்பாதைக்கு ஸ்பெஷல் மெயின்டினர்ஸ் | க௦௦௦ |
| அதலப்பட்டி கண்மாய் கால்வாய்க்கு பாலங்கட்டிய தின் ரிவைஸ்ட் எஸ்டிமேட் | ரூ ஙஉக |
| மீட்டிங் ஹாலுக்கு வேண்டிய பெஞ்சு முதலிய சாமான்கள். | ரூ ங௦௦ |
| செல்லப்ப செட்டியார் தெருவுக்கு மெட்டல் செய்ய | ரூ கூ௦௦ |
| கவன்ஸில் சாங்ஷன் எதிர்பார்த்து ஆபீஸ் முன் வராண்டாவுக்கு எதிரில் வெப்பத்தட்டி கட்ட | எ௦ |
| ஸ்லாடர் ஹவுஸ் கட்டிடம் | கசஎடு |
| நாயடிக்கும் கூடம் கட்ட | ககூ௦ |
| உங-கக-ககூஉ கவுன்ஸிலின் ௫௫உ நிம்பர் தீர்மானத்தின்படி முத்துப்பட்டணம் காட்டுத்தெருவில் போர்ங் கிணறு ஏற்படுத்த | எ௫௦ |
| எஸ் வி அண்ணமலை செட்டியார்தெருவில் பாலங்கட்டியதற்கு ரிவைஸ்ட் எஸ்டிமேட் | உ௦௦ |

# மோட்டிலாலின் தியாகம்.

## 'ஆனந்தபவனம்' தேசத்தின் உடைமை.

## மோட்டிலால் கடிதம்.

தமது "ஆனந்தபவன்" மாளிகையைத் தேசத்திற்கு நன்கொடையாக அளிப்பதாக, அகில இந்தியக் காங்கிரஸ் தலைவருக்குப் பண்டித மோட்டிலால் நேரு பின்வரும் கடிதத்தை எழுதியுள்ளார்:—

"அன்பார்ந்த தலைவரவர்களே!

பழய 'ஆனந்தபவ'னைத் தேசத்திற்கு அளிக்க நான் கொண்டுள்ள யோசனையை சம்பிரதாய பூர்வமாக இப்பொழுது தங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். காந்திஜீ இம்மாதம் உஉ-உ ஜம்புஸாரில் தங்கியிருந்தகாலத்தில் நீங்களும் நானும் இதைப்பற்றிக் காந்திஜீயிடம் சம்பாஷித்திருக்கிறோம். அந்த மனையின் பூர்வசரித்திரத்தையும், தேசிய சுதந்திரப் போராட்டத்தில் நாம் இப்பொழுது எட்டியிருக்கும் நிலையினையும் நோக்க, அதனை இந்தியத் தேசியக் காங்கிரஸின் நிரந்தரத் தலைமைக் காரியாலயமாகச் செய்தலே பொருத்தமாக விருக்கும் என்று நாம் ஒப்புக் கொண்டோம். இதன் கருத்து, அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் காரியாலயம் அந்த மனையிலேயே நிரந்தரமாக அமைந்திருக்கும் என்பதும், இந்தக் காரியாலயத்தால் உபயோகிக்கப்படாமல் அந்த மனையிலிருக்கக் கூடிய பகுதிகள் பின்னல் காரியக்கமிட்டியின் அங்கத்தினரைக் கலந்தாலோசித்துத் தீர்மானிக்கப்படும் பிற தேசிய காரியங்களுக்குப் பயன்படும் என்பதுமாகும். இதற்கிடையில், காரியக்கமிட்டி இதன் முக்கியஉத்தேசத்தை ஒப்புக்கொண்டு, ஏற்றுக்கொள்ளுகின்றதா வென்பதை அறிய விரும்புகிறேன்.

"இரண்டு சிறிய குறிப்புகளை இதனுடன் சேர்த்திருக்கிறேன். ஒன்று இந்த மனையையும் அது அமைந்திருக்கும் இடத்தையும் பற்றிய வரலாறுகளைத் தெரிவிப்பதாகும்; மற்றது, தேசத்திற்கு நான் அர்ப்பணம்செய்ய உத்தேசிக்கும் சொத்தின் விவரத்தைத் தருவதாகும். தேசிய வாரத்தின் முதல் நாளும், சுதந்திர இயக்கத்தின் சட்ட மறுப்பில் முதல் முயற்சியைத் துவக்கக் காந்தியடிகள் குறிப்பிட்டிருப்பதுமான வரும் ஏப்ரல் மாதம் கூ-உ இந்த உத்தேசத்தை நிறைவேற்ற நான் விரும்புகிறேன். எனது விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப்படுமானல், அந்த மனைக்கு 'சுயராஜ்யபவன்' என்று மறுபெயர் சூட்டப்பட வேண்டுமென்பது எனது அவா.

தங்கள் உண்மையுள்ள,
மோட்டிலால் நேரு."

மேலேயுள்ள கடிதத்துடன் ஓர் குறிப்பு சேர்க்கப்பட்டிருக்கிறது. இந்தமனை பாரத்வாஜ ஆசிரமத்துக்கு அடுத்தாற் போலிருக்கிற தென்றும், ஸ்ரீராமபிரான் காலத்தில் அங்கே ஓர் மாண்புமிக்க பல்கலைக் கழகம் அமைந்திருந்ததாகப் பிரசித்திபெற்றுள்ள தென்றும் அதில் கூறப்பட்டிருக்கிறது. தேசீய இயக்கத்தின் வளர்ச்சியிலும் அந்தமனைக்கு நெருங்கிய சம்பந்தமுண்டெனவும் குறிப்பிடப் பெற்றுளது. அகிலஇந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் அநேக முக்கியமான கூட்டங்கள் அதில் கூடியிருக்கின்றன. திரு. மாண்டேகுவிடம் அளிக்கப்பட்ட காங்கிரஸ் லீக் அரசியல் திட்டம் அங்கேயே தயாரிக்கப்பட்டது. ஒத்துழையாமை இயக்கத்திலும், சட்டமறுப்புக் கமிட்டி யிடமும், சுயராஜ்யக்கட்சியிட்டும் இந்தமனைக்கு நெருங்கிய சம்பந்த முண்டு.

இரண்டாவது குறிப்பில் சொத்து விவரம் அளிக்கப்பட்டிருக்கிறது. முக்கியக் கட்டிடங்கள் அமைந்திருக்கும் பூராப்பகுதியும் இதில் அடங்கியுள்ளது. சமீபத்தில் கட்டப்பட்ட புதிய வீடும், பழங்குடிசைகளும் 'விலக்கப் பட்டிருக்கின்றன.

## காங்கிரஸ் தலைவர் பதில்.

காங்கிரஸ் தலைவர் பண்டித ஜவஹர்லால்நேரு, பண்டித மோடிலாலுக்கு எழுதியுள்ள பதில் வருமாறு:—

"அன்பார்ந்த ஐயா!

'பழய ஆனந்தபவா'னைத் தாங்கள் கொடையாக அளிக்க முன்வரும் தயாளகுணத்திற்காக, தங்களுக்கு வந்தனம் செலுத்துகிறேன். பல்லாண்டுகளாகத் தேசிய இயக்கத்துடன் சம்பந்தம் பெற்றுள்ள இந்தமனையைத் தேசத்தின் உடைமையாக்குதல் பொருத்தமே. தேசம் சுதந்திரப் போராட்டத்தைத் துவக்கும் சுபமுகூர்த்தத்தில், இவ்வாறு அது தேசத்திற்கு அர்ப்பணம் செய்யப்படுவதும் ஏற்புடையதே. தாங்கள் அளிக்க முன்வரும் கொடையைக் காரியக்கமிட்டியின் அங்கத்தவருக்குத் தெரிவிக்கிறேன்; அவர்களது பதில்கள் கிடைத்ததும் உங்களுக்கு எழுதுகிறேன். இடையில், 'சுயராஜ்யபவான்' என்ற பொருத்தமான புதிய நாமம் சூட்டப்பெற்ற 'ஆனந்தபவான்' சுதந்திரப் போராட்டத்தில் புகழுக்குரிய தொண்டைப் புரியுமெனவும், சீக்கிரத்திலே இந்தியாவின் சுதந்திரம் ஸ்தாபிக்கப்படுவதைக் காணுமெனவும் நான் நம்புவதைத் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள
ஜவஹர்லால் நேரு."

## உத்கல் சர்வாதிகாரி.

உத்கலுக்கு சர்வாதிகாரியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் திரு. கோபபந்து சௌதிரி. அவர் கட்டாக்கில் தம்மீது விதிக்கப்பட்ட ககச தடையுத்தரவை மீறிவிட்டதாகத் தெரிகிறது. எனவே, சமீபத்தில் அவர் கைதியாகக்கூடும்.

* * *

## சென்னை அரசாங்கமும்.

காந்தியின் சத்தியாக்கிரக விஜயத் துவக்கக் காட்சி சம்பந்தமான மூன்று சினிமாப் படங்களுக்கும் சென்னை அரசாங்கத்தாரும் தடை உத்தரவு விதித்துவிட்டார்கள். சென்னைச் சட்டசபையில் இதைக் கண்டிப்பதற்காக, திரு. அப்துல் ஹமீதுகானுல்சபையை ஒத்திப்போடவேண்டுமென்ற ஓர் தீர்மானம் சென்ற வெள்ளிக்கிழமை கொண்டுவரப்பட்டது. ஙஅ-பேர் சாதகமாகவும் ஙஎ-பேர் எதிராகவும் ஓட்டுக் கொடுத்தால் கண்டனத் தீர்மானம் நிறைவேறிவிட்டது. அது நிறைவேறியபொழுது திரு. துளசிராமும் வேறு சிலரும் "காந்திக்கு ஜே" என்று கோஷித்தார்கள்.



# சத்தியாக்கிரகச் செய்திகள்.

## காந்தி விஜயம்.

அங்கி என்னுமிடத்திலிருந்து காந்தியடிகள் தமது கூட்டத்துடன், மார்ச்சு-மீ உஉ-ந் தேதி ஜம்புஸார் போய்ச் சேர்ந்தார். அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் அங்கத்தினரில் சுமார் உ௦-பேர் அங்கு சென்று காந்திஜீயைச் சந்தித்துப் பேசினர்கள். தாம் கைது செய்யப்பட்டவுடனேயோ, அல்லது தம் கட்டளையிடப்பெற்றவுடனேயோ ஒவ்வொரு தாலுக்காவிலும் கிராமத்திலும் சட்ட மறுப்புத் துவக்கப்படவேண்டுமென்று, ஆந்திரத் தலைவர்களிடம் மகாத்மா கூறினாராம். அன்றியும் ஒவ்வொரு மாகாணமும் தத்தம் நிலைகளுக்கேற்ப சத்தியாக்கிரகம் துவங்கத் தீர்மானிக்கவேண்டுமென்றும், இந்த விஷயத்தில் பூரண மாகாண சுதந்திரம் இருக்கவேண்டுமென்றும் தெரிவித்தாராம்.

ஜம்புஸாரிலிருந்து புறப்பட்டு, காந்தியடிகள் மார்ச்சு-மீ உகூ-ந் தேதி ஆமத் போய்ச் சேர்ந்தார். உசவ புவாவை அடைந்தார். அன்றே, காம்னி போய்ச் சேர்ந்தார். உ௫-ந் தேதி சாம்னியைவிட்டுத் திரால்ஸா போய்ச் சேர்ந்தார். அன்று மாலையே திரோலுக்குப் புறப்பட்டார். உக-ந் தேதி ஜில்லாத் தலைகரான புரோச் போய்ச் சேர்ந்தார். அங்கு வைபவமான வரவேற்பு நடைபெற்றது. ஏராளமான இந்து முஸ்லீம் ஸ்திரி புருஷர் அவரது தரிசனம் பெற வந்தார்கள். புரோச்சில் உ௦ ஆயிரம் ஜனங்களுக்குமேல் கூடியிருந்த ஓர் கூட்டத்தில் பிரசங்கம் புரிந்தார். மாலை ௬-ரூ மணிக்கு அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டார். இரவு அங்காலேசுவரத்தில் தங்கினர். மறுநாட் காலை ஒன்பது மணிக்கு ஸாஜோத சென்றார். அன்று இரவு மங்ரோல் போய்ச் சேர்ந்தார். உஅ-ந் தேதி ராயமா சென்று, அங்கிருந்து இரவு சூரத் போய்ச் சேர்ந்தார். உகூ-ந் தேதி ராயமாவில் தங்கினர். புரோச் ஜில்லாவில் அதுவே கடைசியான ஊர். வழி நெடுகலும் காந்தி ஜனங்களால் மிக உற்சாகமாக வரவேற்று உபசரிக்கப்பட்டார்.

* * *

## கிராம உத்தியோகஸ்தர் ராஜினமா.

தங்கள் ராஜினமாக்களை அனுப்பிய கிராம உத்தியோகஸ்தரில் சிலர் சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் பலவந்தத்தால் அதனை வாபஸ் வாங்கிக்கொண்டதாகச் சொல்லப்படுகின்றது. ஆனல், புதிதாக அநேகர் ராஜினமாச் செய்ததாகச் செய்திகள் வருகின்றன. சூரத்தில் கஅ-பேர் ராஜினமாச் செய்துவிட்டார்கள். பர்டோலி, ஒலப்பாது, ஜலால்பூர் தாலுக்காக்களிலும் பல படேல்கள் ராஜினமாச் செய்துவிட்டார்கள்.

* * *

## ராணுவ முன்னேற்பாடு.

டாண்டியென்னுமிடத்தில் தான் உப்பு சத்தியாக்கிரகம் காந்தி கோஷ்டியாரால் செய்யப்படப் போகின்றது. அந்த இடத்தில் முன்னெச்சரிக்கையாக, ராணுவ ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. அவசரத்திற்கு உதவுவதற்காக ௩௦௦ துருப்புக் கடங்கிய படையொன்று ஜலால்பூரில் வைக்கப்பட்டுளதாம்.

* * *

## ச அல்லது ௫-ந் தேதி.

பம்பாய் கவர்னரான, ஸர் பிரடரிக் ஸைக்ஸ், காந்தியின் சத்தியாக்கிரகம்பற்றி ஆலோசிப்பதற்காகச் சென்ற வாரம் டில்லிக்குப் புறப்பட்டுச் சென்றார். மார்ச்சு-மீ உகூ-ந் தேதி இந்திய அரசாங்க நிர்வாக உறுப்பினர் கூட்டம் ஒன்று நடைபெற்றிருக்குமென்று தெரிகிறது. அரசாங்கத்தின் முறை யாதாயிருக்குமென்று நிச்சயமாகத் தெரியவில்லை. ச அல்லது ௫-ந் தேதி காந்தி அநேகமாகக் கைது செய்யப்படக்கூடும் என்று இந்தியச் சட்டசபை உறுப்பினர்கள் தனி சம்பாஷணைகளில் அபிப்பிராயம் தெரிவிக்கிறார்களாம். காந்தி கைது செய்யப்படலாம், மாளவியா தமது உறுப்பினர் பதவியை ராஜினமாச் செய்துவிடுவாரென்று தோன்றுகிறது. ஐயங்கார் அவர் எவ்வளவோ எதிர்பார்த்தும் அவர் இணங்கப்போவதில்லையாம். அதோடு, அப்பொழுது மாளவியாஜி ஒத்துழையாமையைக் கைக்கொள்ளுவார். இது சட்டசபை மகாநாட்டுக்கு ஓர் பேரிடியாகுமென திரு. ஐயங்கார் அஞ்சுகிறாராம்.

மன்னவர் தமக்கும் அஞ்சேன்
மாண்பெரும் நாட்டிற் காக
என்னுயிர் தனையும் ஈவேன்
எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்
பன்னரும் பார தத்தாய்
பண்டைவாழ் வெய்தப் பாரில்
ஒன்னலர்க் கஞ்சா நல்ல
ஊழியம் தலைமேற் கொண்டேன்.

ஊழியன் காரைக்குடி
சுக்கில-௵ பங்குனி-மூ ககூ-உ

## "சுயராஜ்ய பவனம்."

தலைவர் பண்டித மோட்டிலால் நேரு திடீரென ஓர் அற்புதமான காரியத்தைச் செய்துவிட்டார். அவரது "ஆனந்த பவன" மாளிகையைப் பற்றி, வியந்துரைத்த பலர் மொழிகளை நாம் படித்திருக்கிறோம். பல லட்சம் மதிக்கத் தக்கது அவரது "ஆனந்த பவனம்". அதுவோர் அரண்மனை யொத்த மாளிகை. ஆடம்பர போகங்கள் பல, சிறிது காலத்திற்கு முன்வரை அங்கு நிறைந்திருந்தன வெனக் கேட்டுளோம்; படித்துளோம். ஆனால், சபர்மதியின் தவ வாழ்வு, சமீபத்தில் அங்குத்தோன்றி விட்டதெனப் படித்தோம். "ஆனந்தபவன" மாளிகையிலே வீண் ஆடம்பரங்கள் மறைந்துவரத் துவக்கி விட்டதெனமட்டிலுமே அறிந்தோம். எளியவாழ்வு, அங்கே கைக் கொள்ளப்பட்டுளதென தெரிந்து களித்தோம். ஆனால், இன்று, அந்த 'ஆனந்தபவனம்' நாட்டின் அடிகளிலே காணிக்கையாக சமர்ப்பிக்கப் பட்ட செய்தி நமக்கு ஒரு உவகையையும் ஒரு வியப்பையும் ஒருங்கே யளிக்கின்றன. பண்டித மோடிலால் தமது அரும் மாளிகையைத் தேசப் பொது உடைமையாகச் செய்ய இன்று முன் வந்துளார்.

பெரும் செல்வத்துடன், பெரும் போகங்களுடன் வாழ்ந்து வந்த பண்டித மோட்டிலால், தமதுபோகங்களை யெல்லாம் விட்டு, தேசத்தின் சுதந்திர இயக்கத்திலே கலந்து கொண்ட தியாகமே, யாவர் மனதை யும் உருகச் செய்வது. இன்று அவர், [illegible] பெருமையும் வேறு பல [illegible]ங்களும் வாய்ந்த தம் மாளிகையை, தேசத்தின் சுதந்திர மகாசபையின் தலைமைக் காரியாலய இடமாக்கி, "சுதந்திர பவனம்" என்ற நாமம் சூட்ட விழைவது எத்தகைய உலோப உள்ளத்தையும் கரைத்துவிடுமல்லவா? வள்ளல் கன்னன் விறகுக்காக தனது மனையின் ஒரு பகுதியையே இடித்துத் தானம் வழங்கிய பெருமையை நாம் படித்திக்கிறோம். நமது பண்டித மோட்டிலால், தமது "ஆனந்தபவன"த்தை அப்படியே "சுயராஜ்யபவ"னமாக்கி, அதனருகே ஓர்சிறுமனையிலமர்ந்து, தேசத் திருப்பணி செய்ய உளங் கொண்ட பெருந் தியாகத்தை எவ்வாறு வர்ணிப்பது என நமக்குப் புரியவில்லை.

பெருங்கொடையாளிகள் பணத்தை வாரி வாரி வழங்குவதுண்டு; கேட்டோர்க்கு இல்லையென்னாது கொடுப்பதுமுண்டு; பல அறநிலையங்களைக் காண்பதுமுண்டு; பல அமைப்புக்களுக்கும் பணமும் பிற உதவியும் புரிவதுமுண்டு— ஆனால், பண்டித மோடிலாலின் இந்தப்பெருங் கொடை, இந்நாளைய இந்தியாவில், இணையற்ற வொன்றாகும் என்று கூறுதல் சிறிதும் மிகையாகாது. சாதாரணமாக, உதாரகுணம் வாய்ந்த மனிதர்கள் பணத்தைக் கொடையாக அளிப்பதில் அவ்வளவு தயங்குவதில்லை, அவர்கள்போற்றிக் காப்பாற்றி வந்த பொருளை விட்டுப் பிரிவதெனில், அவரும் சிறிதும் மனமிசைய மாட்டார்கள். ஓர் பெரு மாளிகை; புராதனப் பெருமை வாய்ந்த இடம்; இலட்சக்கணக்கான மதிப்புடையது; பற்பல போகம் நிறைந்த வாழ்வைத் தாம் நடத்திவந்த மனை—இதனை ஒரு மனிதன் நன்கொடையாகத் தேசத் திருப்பணிக்கு அர்ப்பணம் செய்வதென்றால், அதனை எவரால்தான் போதியவளவு புகழமுடியும்?

நமது பண்டை அறிஞர் அளிப்பவன், பெறுபவன், கொடைப்பொருள் காலம், இடம் ஆகியவற்றை நோக்கியே கொடைகளின் தகுதியை நிர்ணயித்து, பெருமையின் அளவை மதிப்பிடுவர். கொடைகளின் சிறப்பைக் காண்பதற்கு இதுவே மிக மிகப் பொருத்தமான முறையாகும். இங்கே கோடையை நல்குபவர், ஓர் பரிசுத்த தேசபக்தர்; நாட்டின் அரசியல் விடுதலைக்காகத், தம் செல்வத்தையும் போகத்தையுமெல்லாம் துறந்து, தம் செல்வக் குமாரனையும் அதன் முன்னணியில் நிற்கக்காணும் பேறுபெற்ற பெரியார். பெறுவது, பல்லாண்டுக் கணக்காகத் தேசத்திருப்பணி செய்யும் அகில இந்திய விடுதலை ஸ்தாபனமான காங்கிரஸ்; பொருளோ, அதற்குரிய தலைமைக் காரியாலயமாக அமையக் கூடிய ஓர் மாளிகை; இடம், என்றும் சுதந்திரத் தியானமும் முயற்சியும் நிறைந்தது; காலம், உலக உத்தமர் மகாத்மாகாந்தி சுதந்திரப் போராட்டத்தைத் துவக்கும் நேரம்—இக்கொடையின் மாண்பினை எடுத்துரைக்க வியலுமோ?

இதுகாறும் போகநிலையமாகவிருந்த "ஆனந்தபவனம்" இனி விடுதலையின் அறிகுறியான "சுயராஜ்ய பவன"மாக வெகு சீக்கிரத்தில் மாறிவிடக்கூடும். "சுயராஜ்ய பவனம்" காங்கிரஸ் தலைவர் நம்புமாறே, தேச சுதந்திரப் போராட்டத்தில் புகழுக்குரிய தொண்டினை யாற்றுமென்பதிலும் ஐயமில்லை. "சுயராஜ்ய பவனம்" தனது முந்திய பெயருக்குரிய ஆனந்தத்தை இனித்தேசத்திற்கு நல்கும் ஓர் இன்ப நிலையமாய்ப் பரிணமித்து, தேச சரித்திரத்திலே ஓர் நிரந்தரஸ்தானம் பெறுமென்பதும் மிக மிக நிச்சயமாகும். பண்டித மோட்டிலாலின் தேச பக்தியும் பெருந் தியாகமும், வள்ளன்மையும், என்றென்றும் நிலைத்திருக்கத்தக்க ஞாபகச் சின்னமாகவும் அது இனி இலங்கும்வருங்கால இந்திய சரித்திரத்தில், "சுயராஜ்ய பவனம்" பெரும் பங்கு தொண்டினை இயற்றும் பேறும் பெறும். "சுயராஜ்ய பவனத்தின் தூய மணம் நாடெங்கும் இனிப் பரிமளிக்கும். "சுயராஜ்ய பவன"மும் பண்டிதரின் தியாகமும் நிலமிசை நீடுவாழ்க!

## 'அண்ணாமலை' : : : : பல்கலைக் கழகம்.

சைவ உலகின் திலகமாகத் திகழ்ந்த பழம் பெருமையோடு, சிதம்பரத்திற்கு இந்நாள் 'அண்ணாமலை. பல்கலைக்கழகத்தால் அற்புதமான புதிய பெருமையும் ஏற்பட்டிருக்கிறது. பண்டைநாளில் பல்லவர் சோழர் பாண்டியர் முதலான முடிமன்னர்களும் விஜயநகர வேந்தர்களும் ஆனந்தநடராஜ மூர்த்தியின் சந்நிதியை அழகுசுமந்த சிற்பச் செல்வமாக்க முயன்றனர். பதஞ்சலிபோன்ற முனிவர்களும் மணிவாசகர் ஆதிய தொண்டர்களும் உமாபதி சிவமாதிய நல்லாசிரியர்களும் தமது ஆன்மசக்தியாலும் ஞானசக்தியாலும் சிதம்பரத்தை ஓர் ஞானப்பூங் கோயிலாக்க முயன்றனர், சைவசமய சீலர்களால் பூலோக கைலாசம் என்று போற்றப்படும் இந்நகரத்தின் ஒரு பகுதி, இன்று தருமசீலராகிய செட்டிநாட்டரசாது புகழை நிலைநிறுத்தும் 'அண்ணாமலைநகர்' என்னும் பெயர் வாய்ந்ததாய், 'அண்ணாமலை' பல்கலைக் கழகம் என்னும் சர்வகலாசாலையின் உறைவிடமாய் அமைந்திருப்பது பெரிதும் பொருத்தமுடையதே யாகும்.

இப் பல்கலைக் கழகத்தின் செனட் சபையைச் சென்னை மாகாண அதிபதி (கவர்னர்)ஸர் ஜார்ஜ் ஸ்டான்லி திறந்துவைத்தார். அப்பொழுது கவர்னரை வரவேற்றுப் பேசிய பேச்சில் ராஜாசாகிப், தமது வள்ளன்மையின் பெரு விளைவாகிய பல்கலைக் கழகத்தைக் குறித்து ஓர் அரும் பெருங்கருத்தை வெளியிட்டுள்ளார். அதாவது:, இம்மாகாணத்திலும் இதற்கு வெளியிலுமுள்ள தமிழ்மக்கள், ஒருகோடியே எண்பது லட்சம் பேரும், தமிழ்க் கல்வி, தமிழிலக்கியம், தமிழ் நாகரிகம், தமிழர் மனப்பண்பு ஆதியவற்றின் தனிப்பெரும் பயனை உலகறியச்செய்வதற்காக ஓர் கலைக்கழக அமைப்பு வேண்டுமென்று விரும்பி நின்றார் என்பதேயாம்.

தமிழ்நாடு, தனக்குரிய மொழியையும் கலைச்செல்வத்தையும் தகுந்த முறையில் பேணி வளர்ப்பதற்கு ஓர் பெருங் கலைக் கழகத்தை வேண்டி நிற்கின்றதென்பது உண்மையே. சென்ற பத்தாண்டுகளாக இந்நோக்கம் மொழிப்பற்றும் நாட்டுப் பற்றும் வாய்ந்த பல நன்மக்கள் உள்ளங்களிலும் தளிரோடி வளர்ந்து கொண்டிருக்கிறது. கதூஉகூ-ல் ஆந்திரர்களது பல்கலைக்கழகம் அமைக்கப் பெற்றபின், தமிழர்களில் சிலரும் தங்கள் கருத்தை நிறைவேற்றிக்கொள்ளும் பொருட்டு, ஓர் கிளர்ச்சி செய்து பார்த்தனர். இதன் பயனாய் அரசாங்கம் ஏற்படுத்திய கமிட்டியால் விசேஷ நன்மையொன்றும் விளைந்துவிடவில்லை யென்பது அனைவரும் அறிந்ததே.

ஓர் தமிழ்ப் பல்கலைக் கழக ஸ்தானத்தை, 'அண்ணாமலை' பல்கலைக்கழகம் வகிக்க வேண்டுமென்பதே தமிழறிஞர் கருத்தாகும். இப்பொழுது இருக்கும் நிலையில் இப்பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சிக்குரிய இலாக்காக்கள் அமைக்கவும், புத்தகாலயத்தை ஆண்டாண்டு தோறும் அபிவிருத்தி செய்யவும் கூடுமானவரை, குருகுல முறையிலே கல்வி புகட்டவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக் கின்றன வென்று அறிகிறோம். எனினும் இப்பல்கலைக் கழகத்தில் தமிழ் வளர்ச்சிக்குரிய விசேஷ வசதியொன்றும் இன்னும் அமைக்கப் பெறவில்லை யென்பது குறிப்பிடத்தக்கது.

கல்விப்பயிற்சியின் பலதுறைகளிலும் தலைமைதாங்கும் ஆசிரியர்கள் அந்நிய நாடுகளில் பயின்றவர் களென்றும் மாணக்கர்களை விரிந்த நோக்குடையவர்களாகச் செய்வதுதான் இதற்குக்காரணமாகுமென்றும் பல்கலைக்கழகத்தின் ஸ்தாபகரும் போஷகருமான ராஜாசாஹிப் தமது பேச்சினிடையே கூறியுள்ளார். இவ்வாறு செய்வதால் தமிழர் குலதனமாகிய மொழியும் இலக்கியமும் கலைகளும் வளர்ந்தோங்குவதற்குரிய வசதிகள் அப் பல்கலைக் கழகத்தில் எங்ஙனம் அதிகரித்தல் கூடும் என்பது எமக்கு விளங்கவில்லை.

'அண்ணாமலை'பல்கலைக்கழகம் சென்னைப் பல்கலைக் கழகத்தின் 'எதிரொலி' யாகஇருந்து, இரவலறிவுவாய்ந்த குமாஸ்தாக்களையும் பிறரையும்உற்பத்திசெய்யாமல், உண்மையான தமிழ்த் தொண்டர்களையும் கலைச் செல்வர்களையும் தேசபக்தர்களையும் தியாக புருஷர்களையும் படைத்துவிடுதல்வேண்டும். மேலைநாட்டு அறிவுச் செல்வத்தை நம் மாணாக்கரும் துய்த்து இன்புறுவதோடு, நம் முன்னோர் பன்னெடுங்காலமாக ஈட்டிவைத்துள்ள ஞான பொக்கிஷத்தை ஆராய்ச்சிவாயிலாகப் போற்றி வளர்த்து, உலகத்திற்கெல்லாம் வழங்கத்தக்க ஆற்றல்வாய்ந்த நல்லறிஞராகவும் தமிழ் மாணாக்கர் திகழ்தல் வேண்டும். இப் பெரு நெறியில், தமிழர்களுக்கு அண்ணாமலை பல்கலைக் கழகம் ஓர் வழிகாட்டி யாகவாவது சமீப எதிர்காலத்தில் அமைதல் கூடும் என்று எதிர் பார்க்கிறோம்.

## இடி முழக்கம்.

### படத்திற்குப் பயம்

காந்தியடிகள் சத்தியாக்கிரகப் போருக்கு மார்ச்சுமீ கஉ புறப்பட்ட காட்சியை மூன்று சினிமாகம்பெனியார் எடுத்தார்கள். ஆனால், மாகாண அரசாங்கங்கள் பல அவற்றை தடை செய்து விட்டன. நமது சென்னை யாசாங்கமும் பிறமாகாணங்களின் அடிச்சுவட்டைப் பின் பற்றிவிட்டது. இதனைச் சட்டசபை கண்டித்துளது. சட்டசபைவாதம் மிக உருசிகாமானது. காந்திஜீயின் விஜயத்தின் படக்காட்சி, என்ன ஆபத்தை நல்கிவிடப் போகிறது? பத்திரிகை களிலெல்லாம் காந்திவிஜயம் பெருத்த தலைப்புகளின் கீழே விரிவாகப் பிரசுரிக்கப் படவில்லையா? படத்தினும் இயக்கமன்றோ சக்திவாய்ந்தது? பத்திரிகைச் செய்திகளைப் படித்தோர் தாமே அறிவர்! ஆதலால், அது ஆபத்தல்ல என்று கருதுகின்றார் சர்க்கார். இதைவிடப் பேதைமை வேறொன்று மிருக்க முடியாது. காந்தியின் இயக்கம் நாடெங்கும் கற்றோரைவிட மற்றோரிடையே கூர்மையாக விசாரித்தறிந்து வரப்படுகின்றது என்பதை அவர் அறியார் போலும்! அன்றியும், படித்தவருக்கே மனோ நிதானமும் தீர்க்காலோசனையும் உண்டென நினைப்பதும் தவறாகும். எவ்வாறாயினும், காந்தி விஜயத்தின் முதல் நாள் என்றும் மனிதர்கள் கண் முன் காட்கி தந்து நிற்கும் அரசாங்கம்,காந்தி ஜீயின் இயக்கத்தைவிட அதன் நிழற்படத்திற்கு அஞ்சுகின்றது. ஜனங்களோ அவ்வியக்கத்தின் உட்கருத்தால் தம் உள்ளம் உருகப் பெற்று வருகிறார்கள். இதனை அரசாங்கம் உணராதது விந்தையே யாகும்.

### போருக்கு உதவி.

வெகு சமீபத்தில் காந்தியடிகள் கைது செய்யப்படக்கூடும். அவர் கைது செய்யப்பட்ட உடனேயோ, அல்லது அவர் கடற்கரை போய்ச் சேர்ந்த உடனேயோ நாடு முழுவதும், அவ்வம் மாகாணச் சர்வாதிகாரிகளின் தலைமையில் வரிமறுப்பு இயக்கம் ஏக காலத்தில் நடைபெறும். எவ்வாறாயினும், வெகு சீக்கிரத்தில், நமக்கு மிக அருகேயும், எட்டவும் ஓர் புதுமையான யுத்தம் நடைபெறப் போகின்றது. அதில் தொண்டர்களாகச் சேர்ந்தும், பணம் உதவியும் தேசவிடுதலைக்குச் சேவை புரிவதில் நமது நாடும் தனது பங்கினை ஆற்றுதல் வேண்டும். தொண்டர்களாகச் சேரவிரும்புவோர், புனிதமான சிந்தையுடன், ஆழ்ந்தயோசனைக்குப் பின், சத்தியாக்கிரகப் பிரதிஞ்ஞையில்கையெழுத்திட வேண்டும். தொண்டர்களின் விண்ணப்பம் அங்கீகரிக்கப்படுமாயின், தலைவர் கட்டளைகளின்படி நடக்க அவர் எந்த நிமிஷத்திலும் தயாராயிருக்க வேண்டும். உண்மையிலே தொண்டராகச் சேரவிரும்புவோர் வீண் ஆரவாரம் செய்து கொண்டு, முறைகளை யறியாமல், மனம்போனபடி கூக்குரல் போட்டுக் கொண்டிருக்க மாட்டாரார்கள். இப்பொழுது தமிழ்நாட்டுச் சத்தியாக்கிரகத் தலைவர் திரு ஸி. ராஜகோபாலாச்சாரியாரே யாவார். தொண்டர்கள் அவருடைய தலைமையிலேயே அமைந்து நடக்க வேண்டுமேயன்றி. ஊருக்கொரு சத்தியாக்கிரம் நடத்த யாரும் நினைப்பார்களானால் அது ஒழுங்கீனமும் பைத்தியக்காரத் தனமுமே யாகும், அத்தகைய எண்ணங்கொண்டவர் உண்மையான சத்தியாக்கிரகியாகச் சிறிதும் தகுதியற்றவரே யாவர். எனவே, தொண்டர்கள் பணிவும், ஒழுங்கும் உடையவர்களாக, விண்ணப்பப் பத்திரமான பிரதிஞ்ஞைச் சீட்டில் கையொப்ப மிட்டு, வேண்டும் பொழுது சத்தியாக்கிரகம் செய்யத் தயாராயிருக்க வேண்டும். பணம் உதவுவது இவ்வளவு சிரமமான கடமையல்ல, இத்தத்துய இயக்த்திற்கு ஒவ்வொருவரும் தத்தம் மாலான பணவுதவியைப் புரிதல் கிடைத்தற்கரிய ஓர் பெரும்பேறாகும். தனவணிக நாட்டினர் யாவரும் இப்புனித இயக்கத்திற்கு ஜாதி, மத பேதங்கள் பாராட்டாமல் நிறைந்த உதவி செய்வார்களென நம்புகிறோம்.

### ரயில்வண்டித் திறப்பு.

நாளையத்தினம் (ஏப்பரல் உ-உ நாள் புதுக்கோட்டை யிருந்து சாமான் வண்டிகள் (குட்ஸ்ட்ரேன்) விடப்படும்; தற்பொழுது புதுக்கோட்டை காரைக்குடி லைனிலுள்ள ஸ்டேஷன்களுக்கு ஒவ்வொரு சனி, புதன் ஆகிய இருதினங்களில் தான் வண்டிகள்விடப்படும்எனத்தெரிகிறது,தொடர்பாக ஒவ்வொரு நாளும் வண்டிவிடும் விஷயம் பின்னரே முடிவு செய்யப்படுமாம்,



## முனிசிபல் பெண் பாடசாலை.

சென்ற வெள்ளிக்கிழமை காலை அ-மணிக்குமுத்துப் பட்டிணம் திரு, பழ, சிதம்பரம் செட்டியாரவர்கட்குச்சொந்தமானகட்டடத்தில் முனிசிபல் பெண்பாடசாலை தேவகோட்டை டெப்டிகலெக்டர் திரு. கோவில் பிள்ளை அவர்கள் மனைவியாரால் திறந்து வைக்கப்பட்டது. அத்தருணம் சுமார் [illegible] மாணக்கியர் சேர்க்கப் பட்டார்கள் மேல்செவர்ப்பட்டி போர்டுஸ்கூல் ஆசிரியையாக விருந்த ஸ்ரீமதி கல்லமுத்து அம்மாள் (ஹயர்கிரேட் பாஸ் செய்தவர்) ஆசிரியாக நியமிக்கப் பட்டுள்ளார். குழந்தைகட்கு வாழைப்பழம், கற்கண்டு மிட்டாய் முதலிய தின்பண்டங்கள் அளிக்கப்பட்டன.

முதலாவதாக, பாடசாலையைத் திறந்து வைக்க ஸ்ரீமதி கோவில்பிள்ளை அவர்களைக் கேட்டுக் கொள்ளுங்கால் சேர்மன் ராவ் பகதூர் சிதம்பரம் செட்டியா ரவர்கள் கூறியதாவது:—

இந்தப் பாடசாலை, திறக்க, க௯உக-௵ ஜனவரி-மீ உ௬-உ யிலேயே முனிசிபல் கவுன்சிலால் தீர்மானிக்கப் பட்டு [illegible]மாதமாக முயற்சி நடத்தும் இன்றையதினம் அறிவிலும் குணத்திலும் சிறந்த பெரியாராகிய மிஸஸ் கோவில்பிள்ளை அவர்களால் திறக்கும் பாக்கியம் கிடைத்ததைப் பற்றி மிகவும் மகிழ்கின்றேன். இந்த நகரில் முனிசிபாலிட்டி வருமுன் போர்டு பாடசாலை ஒன்றேனும் கிடையாது. முனிசிபாலிட்டி ஏற்பட்ட பிறகு முனிசிபல் ஆதிதிராவிட பள்ளிக்கூடம் சென்ற ௵ ஆரம்பிக்கப் பட்டது. இரண்டாவதாக இன்று இந்த பெண்பாடசாலை திறக்கலாயிற்று இன்னும் சில நாட்களில் நான்கு புதிய பாடசாலைகள் திறக்க முனிசிபல் கவுன்சில் தீர்மானித்திருக்கிறது ஆகவே க௯௩௦, [illegible]வது வருஷத்தில் [illegible]-முனிசிபல் பாடசாலைகள் நடைபெறுவது எல்லோருக்கும் களிப்பையுண்டாக்கும் கல்வி அபிவிர்த்தி விஷயமாய் முனிசிபல் கவுன்சில் எடுத்துக்கொள்ளும் சிரத்தை போற்றத் தக்கதேயாயினும், இந்நகருக்கு இத்தனை பாடசாலைகளும் போதாதது யென்பதை கவுன்சில் உணராமலில்லை. கூடிய விரைவில் இக்குறை நிவர்த்திக்கப்படுமென்று கவுன்சில் சார்பாக உங்களுக்கு உறுதி கூறி இன்று தங்களுடைய அநேக காரியங்களை விட்டு சிரமம் பாராது தேவகோட்டையிலிருந்து இங்கு விஜயம் செய்திருக்கும் மிஸஸ் கோவில்பிள்ளை அவர்களை இப்பாடசாலையை திறந்து வைத்து சிறப்பிக்கும்படி கோருகிறேன்,

ஸ்ரீமதி கோவில் பிள்ளை.

பாடசாலையைத் திறந்துவைக்கும் கால் மிகச் சுருக்கமாகவும் அழகாகவும் பேசினார்கள். அதன் சாரமாவது:—

"என்னை இப்பாடசாலையைத் திறந்து வைக்கக் கேட்டுக்கொண்டதற்கு மிக வந்தனம் செலுத்திக்கொள்ளுகிறேன். பெண்கள் படிக்க வேண்டுவது மிக அவசியம். பெரும் படிப்புகள் பெறாவிடினும் எழாவது வகுப்புவரையாவது ஒவ்வொரு பெண்மக்களும் படிக்கவேண்டியது அவசியம். எழுதப்படிக்க வேண்டியது அவசியம்; எழுதப்படிக்கத் தெரியாதவர்கள் தாயார், தகப்பனார், சுற்றத்தார்களுக்கு கடிதம் எழுதவேண்டுமானால் பிறர் உதவியைநாட வேண்டியிருக்கிறது. தங்கள் சொந்த விஷயத்தை அறிவிக்க பிறர் உதவியை நாடுவது அழகல்ல சில பெண்கள் படியாக்குறையால் கெட்ட வார்த்தைகளை உபயோகிக்கிறார்கள். அது பிசகு. கல்வியால் நல்லொழுக்கம் ஏற்படும். தெய்வபக்தி வளரும், அறிவு முதிர்ச்சிபெறும். ஆனால் பள்ளியில் வாசித்தலோடு படிப்புமுற்றுப்பெறுவதில்லை வீட்டிற்குச் சென்ற பின்னரும் படித்தல் வேண்டும். அவ்வாறு வாசித்தால்தான் படித்த பாடம் மறவாதிருக்கும்" என்று சிறுமிகட்கு பல நல்லுரைகள் பகர்ந்தார்.

பின்னர் தேவகோட்டை டெப்டி கலெக்டர் திரு கோவில் பிள்ளை அவர்கள் சிறிது நேரம் பாடசாலையின் அவசியத்தைப்பற்றி கூறினார்கள். நன்றிகூறுதலோடு விழா அ-௩௦- மணிக்கு இனிது நிறைவெய்தியது.

## தந்தி.

பிநங் சுக்கில பங்குனி கஎ-உ

| | |
|---|---|
| உண்டியல் | நூற்று ஐம்பத்து ஐன்று |
| ஈயம் விலை | எண்பத்தாறு |
| ரப்பர் விலை | முப்பத்துமூன்று |

[மகாத்மா காந்தியை ஆசிரியராகக் கொண்ட "யங் இந்தியா" வில் உள்ள விஷயங்களை இவ்வார முதல் சாரமாகத்தர எண்ணியுள்ளோம். [கீழுள்ளவை இவ்வார "யங் இந்தியா" வின் சாரம்.]

### மலையின் பிரசவம்.

இத்தலைப்பின்கீழ் மகாத்மா காந்தி எழுதியுள்ள கட்டுரை இன்னேர் பக்கத்தில் பிரசுரிக்கப் பெற்றுள்ளது. திரு. சென்குப்தாவின்மீது இரங்கூன் அரசாங்கம் தொடர்ந்த வழக்கினையே மலையின் பிரசவ வேதனையென மகாத்மா குறிப்பிடுகிறார். அதனால், திரு. சென்குப்தாவுக்கு விதிக்கப்பட்ட சிறு தண்டனையே, பர்மா அரசாங்கம் பெற்றெடுத்த சுண்டெலி. இவ்வாறு அரசாங்கம் பலத்த தண்டனைவிதிக்கவோ, தம்போன்றவரை வழக்குத் தொடரவோ கூடச் சக்தியற்றிருப்பதற்கு, அஹிம்சையின் பெருமையே காரணமென அதில் மகாத்மா விளக்குகிறார்.

### ஸீஸருக்குரியதை அவருக்குச் செலுத்துக.

இதுவும் மகாத்மா காந்தி யெழுதியதே. இயேசுகிருஸ்துவிடம் சிலர்அரசனாகிய ஸீஸருக்கு வரிசெலுத்துவது நியாயமா என்று வினவினர்கள். அவர் ஓர் நாணயங்கொண்டுவருமாறு பணித்தார், பணத்தின் மீது இருக்கும் அரசர் தலையைக் காட்டி, ஸீஸருடையதை ஸீஸருக்குச் செலுத்துங்கள், இறைவனுடையதை இறைவனுக்குச் செலுத்துங்கள் என்று சாமர்த்தியமாகப் பதிலளித்தார். காந்தி சத்தியாக்கிரகம் தவங்குமுன் இயேசுவின் இவ்வசனத்தைச் சுட்டிக்காட்டி, காந்தியின் சட்டமறுப்பு இயக்கம் இயேசுவின் உபதேசத்திற்கு விரோதமாகுமென ஓர் ஆங்கில நண்பர் எச்சரித்திருக்கிறார், பஞ்சாப்பிலிருந்து ஓர் சுதேசகிறுஸ்வரும் இதையே ஏறக்குறையக் அனுசரித்து காந்தியைக் கண்டித்து ஓர் கடிதம் எழுதியிருக்கிறார். இவர்றிற்குப் பதில் அளிக்கிறார் மகாத்மா. எதிரிகள், இயேசுவைத் தந்திரமாக மடக்கிவிட வேண்டுமென்றே இந்தக் கேள்வியைக் கேட்டார்கள். இயேசு வெறுப்போடு அளித்த சாமர்த்தியமான பதிலாகுமிது. இறைவனது சட்டங்களுக்கு மேலாக மனிதனது அதிகாரத்தை இயேசு ஒருபொழுதும் அங்கீகரிக்கவில்லை, சொல்லுக்குப் பொருள் செய்யும் வலையில் யாரும் விழுந்துவிடலாகாது, 'எழுத்து' க் கொன்றுவிடும்; 'உட்கருத்தே' உயிர்தரும்,

### காங்கிரஸ் கமிட்டி.

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் சென்ற கூட்ட நிகழ்ச்சிகளை விவரித்து பண்டித ஜவஹர்லால் நேரு ஓர் வேண்டுகோள் விடுத்திருக்கிறார், இப்பொழுது சத்தியாக்கிரகம் ஓர் சமிஞ்ஞை மாத்திரமாகவில்லையென்றும் ஆயிரக்கணக்கானவர்கள் சேரக்கூடிய பெருத்த அளவில் சட்டமறுப்பை நடத்தக் காங்கிரஸ் முயல்கின்றதென்றும் அவர் குறிப்பிட்டுள்ளார், காந்தியடிகள் கைதியானவுடனேயோ அல்லது தாங்கள் முடிவுசெய்யுமோர் தேதியிலோ மாகாணக் காங்கிரஸ் கமிட்டிகள் சட்டமறுப்புத் துவங்கலாம், அவர் கைதி செய்யப்படாவிட்டால், அவர் கடற்கரை செல்லும்வரை காத்திருக்கவேண்டும், அவர் கட்டளையிடுவார்; உடனே துவங்கவேண்டும், இதற்காக மாகாணக்கமிட்டிகள் இப்பொழுதிருந்தே தயாராகிவர வேண்டும், தேசிய வாரத்தின் முதனுளுக்கு முந்திய தினமான ஏப்பிரல்மீ ௫௳ காந்தி கடற்கரைபோய்ச் சேருவார், சட்டமறுப்பியக்கம் பெருத்த அளவில் துவங்கியவுடனே மாணவரும், வக்கில்களும், அன்னபிறரும் அதில் கலந்துகொள்ளவேண்டும், போராட்டம் மிக நெருங்கிவிட்டது



# இவ்வார 'இளமை இந்தியா'

என்பதைச், சட்டமறுப்பில் கலக்க விரும்புவோரும், அதற்கு உதவிசெய்ய விழைவோரும் உணர்ந்து கொள்ளவேண்டும்,

### சத்தியாக்கிரகப் பிரதிஞ்ஞை.

சத்தியாக்கிரகிகள் ஓரேவிதமான பிரதிஞ்ஞையில் கையெழுத்திட வேண்டுமெனக் காங்கிரஸ் கமிட்டி தயாரித்துள்ள பின்வரும் பிரதிஞ்ஞையை "யங் இந்தியா" வில் காங்கிரஸ் தலைவர் வெளியிட்டுள்ளார்:—"(க) தேசீயக் காங்கிரஸால் கைக்கொள்ளப்பட்டுள்ள, இந்தியாவில் சுதந்திரத்திற்கான சட்ட மறுப்பியக்கத்தில் நான் சேர விரும்புகிறேன்; (உ) எல்லா அமைதியான—சட்டபூர்வமான வழிகளாலும், பூர்ண சுயராஜ்யத்தை அடைவது" என்ற தேசீயக் காங்கிரஸின் கொள்கையை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன்; (௩) இந்த இயக்கத்தில், சிறைக்குச் செல்லவும், எனக்களிக்கப்படக் கூடிய பிற தண்டங்களையும் தண்டனைகளையும் அனுபவிக்கவும் நான் தயாராகவும் சித்தமுடையனாகவு மிருக்கிறேன்; (௪) நான் சிறைக்கு அனுப்பப் பட்டால், காங்கிரஸ் நிதியிலிருந்து எனது குடும்பத்திற்கு எவ்விதப் பணவுதவியும் வேண்டேன்; (௫) இயக்கத்தின் தலைவர்கள் இடும் கட்டளைகளுக்கு மாறுபேசாமல் உடனே கீழ்ப்படிந்து நடப்பேன்." இதைவிடக் கடினமான பிரதிஞ்ஞை யெதிலும் கையெழுத்திட்டவர்கள் இதில் மறுபடியும் கையெழுத்திட வேண்டியதில்லை யெனப் பண்டிதர் கூறுகின்றார். இதைக் கையெழுத்து இட்டவுடனேயே, இட்டவரைச் சத்தியாக்கிரகியாகச் சேர்த்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை யென்றும், சம்பந்தப்பட்ட கமிட்டி அங்கீகரிக்கவோ மறுக்கவோ அதற்கு உரிமையுண்டென்பதையும் அவர் குறிப்பிடுகின்றார்.

### புதிய ஆங்கிலப் புராணம்.

காந்தியடிகளின் இறுதிக் கடிதத்தை வைசிராயிடம் கொண்டு சென்ற திரு ஆர். எ. ரெய்னால்ட்ஸ் இதனை எழுதியிருக்கிறார். பிப்ரவரி-மீ ௨௮-௨ லண்டன் "டைம்ஸ்" பத்திரிகை வெளியிட்ட "விசேஷ இந்திய இதழிலுள்ள விஷயங்களைப் பற்றி அவர் ஆராய்கிறார். அதில் உள்ள பொருள்களெல்லாம் இந்தியாவைப் பற்றிய உண்மைகளைத் திரித்தவையாக இருக்கின்றனவென அவர் விளக்குகிறார். இந்தியாவைப் பற்றிய பொய்களே ஆங்கில மக்களுக்கு பள்ளிக்கூட மாணவராயிருக்கும் காலந்தொட்டுப் போதிக்கப் படுகின்றன வென்று தமது அனுபவம் கொண்டு அவர் உரைக்கிறார். எனவே, "பெருமிதமாகப் பொதுமக்கள் இயக்கமொன்று பிரிட்டனுக்கு விரோதமாக எழுந்தாலன்றி எனது நாட்டவர் உண்மையை உணரார், அவர் பொருட்டும் நம் பொருட்டும் காந்திஜியின் வேண்டுகோளின் பேரில் ஓர் புரட்சி தோன்ற வேண்டுமென இறைவனை நான் பிரார்த்திக்கிறேன். ஏனெனில், இரண்டிலொருவழிகளாலேதான் அது தோன்றும். அவற்றுள் மற்ற வழி இரு நாடுகளையும் இரத்த வெள்ளத்தில் மூழ்குவிக்கும்" என, திரு. ரெய்னால்ட்ஸ் தமது கட்டுரையை முடிக்கிறார்.

### ராஜபக்தியில்லாதிருப்பதன் அவசியம்.

இது மகாத்மா எழுதியது. சட்டமறுப்பின் நோக்கம், ஆள்களைத் தண்புறுத்துவதல்ல வென்றும், முறையையே தாக்குவதென்றும் இதில் விளக்குகிறார். தீய அரசாங்கமொன்றை எதிர்ப்பது ஜனங்களின் கடமையாகும். சாத்வீகச் சட்ட மறுப்பைப் பலாத்காரம் தலை தூக்கி நிற்கும் இடத்தில் அனுஷ்டிப்பதில் அபாயமுண்டு. பலாத்காரத்திற்கு இரையாவோரிடம் அது ஆத்திரத்தை உண்டாக்கும். அது உள்ளே பதுங்கிக் கிடக்கும் கோழைத்தனத்தினாலே யே ஒழுக்கப்படுத்தப்பெற்று [illegible] கிடக்கும் நாச சக்தியை ஒழுங்கான பயிற்சி பெற்று உயிரை இரட்சிக்கும் சக்தியாக மாற்றுவதற்குத் தலை சிறந்த சாதனம் சட்ட மறுப்பாகும். இதன் வெற்றிகள் பல நிரூபிக்கப்பட்டுள்ளன, நேரர் இதில் பழக்கம் பெற்றுவிட்டால், இதனைக் கைக்கொள்ளுவதால் அதிக ஆபத்து நேராது.

### தொண்டர் பிரதிஞ்ஞை

காங்கிரஸ் கமிட்டியால் தயாரிக்கப்பட்ட தொண்டர் பிரதிஞ்ஞை ஓர் விண்ணப்பமேயாகுமென்றும், அவசர நிலைமையை நோக்கி இது தயாரிக்கப்பட்டுளதென்றும், வகுப்பு ஒற்றுமை, கதர், தீண்டாமை யொழித்தல், மதுவிலக்கு முதலியன இதில் சேர்க்கப்படாவிடினும் அவற்றைக் காங்கிரஸ் விட்டுவிட்டதென அர்த்தமில்லை யெனவும், காங்கிரஸ் இயக்கம் நாணயமாக நடத்தப்படும் என்ற நம்பிக்கையுடனேயே இது தயாரிக்கப்பெற்றுளதென்றும், இந்தத்தொண்டர்கள் காங்கிரஸ் ஓட்டர்களல்லவென்றும்மகாத்மா ஞாபகப்படுத்துகிறார்,

### சில யோசனைகள்.

வேறு பல சட்டங்களை மீறலாமெனக் கூறப்பட்ட யோசனைகளைப்பற்றி மகாத்மா இதில் அபிப்பிராயம் தெரிவிக்கிறார். சௌகிதார் வரியை மறுக்கலாமென்பது ஒரு யோசனை, இது அவ்வளவு தீமையானதல்லவென்றும், சுயராஜ்யத்தில் இந்த வரி தேவையாயிருக்கக்கூடுமென்றும் உப்பு வரியை நாம் சுய ஆட்சியிலும் விரும்பவில்லை யென்றும், அதைப்போன்றதல்ல இது வெனவும், இதனை எதிர்க்கத் தேவையில்லை யெனவும் அவர் கருதுகிறார். காட்டிலாக்காச் சட்டங்களை மறுக்கலாமென்பது இன்னேர் யோசனை. இச்சட்டங்களைப் பற்றித் தாம் ஆராய்ந்ததில்லை யென்றும், இவற்றைத் திருத்தத் தேவையிருக்கலாமென்றும், ஆனால் சுயராஜ்யஸ்தாபனமாகும் வரை நாம் காத்திருத்தல் நலமாயிருக்குமெனவும் காந்தி அபிப்பிராயப்படுகிறார், மேய்ச்சற்றரைச்சட்டங்களும், அவை கொடுமையா யிருக்கின்றனவா வென்பதும் தமக்குத் தெரியாதென அடிகள் தெரிவிக்கின்றார், மது, அபினி, அந்நியத்துணிக் கடைகளில் மறியல் வேலைசெய்வது மிக மேலென மகாத்மா அபிப்பிராயப் படுகிறார், சிற்க, ஏப்பிரல் ௬-௨க்குள் மாகாணங்கள் படைதிரட்டும் வேலையில் சிறிது நேரமும் இழக்காமல் ஈடுபட வேண்டுமென்பது அடிகளின் விருப்பம்.

### மார்ச்சுமீ ௧௨௨,

சில மாகாண அரசாங்கங்கள் மார்ச்சுமீ ௧௨-௨ மகாத்மா சபர்மதி விட்டுப் புறப்பட்ட காட்சியின் சினிமாப் படங்களைத் தடுத்து விட்டதைப்பற்றி, மகாதேவ தேசாய் இதனை வரைந்திருக்கிறார், ராமாயண பாரதகாலத்தில் ஸினிமா இருந்ததா? புத்தபகவான் காலத்தில் ஸினிமா இருந்ததா? என்றாலும் ராமர் வனத்திற்குப் புறப்பட்ட காட்சியும், பாரதத்தின் அறப்போர்க் காட்சியும், மார்ச்சுமீ ௧௨-௨ காந்தி போருக்குப் புறப்பட்டபொழுது, ஆயிரக்கணக்கான ஜனங்களுக்கு ஞாபகம் வந்தன, புத்தரின் பெருந்துறவு நேற்று நடந்தது போலவே கோடிக்கணக்காண ஜனங்களின் மனத்தில் புத்தப்புதிதாக இருந்து வருகின்றது, ஜலியன் வாலாப்படு கொலை நடந்த ஏப்பிரல்மீ ௧௩-௨யும் அதற்கு ஸினிமாப் பட மில்லாவிடினும் ஒவ்வொரு இந்தியனுக்கும் ஞாபக மிருக்கிறது, ஸினிமாப் படத்திற்குத் தடைசெய்தாலும் சரிதான், இல்லையாயினும் சரிதான்; பரிகசித்தாலும் சரிதான், அடக்குமுறை தோன்றினாலும் சரிதான்; மார்ச்சுமீ ௧௨௨ தோன்றிய போராட்டம் முடிவுவரை நடக்கும்; முன்னே சென்றுள பிற பெருநாள் எதனையும் போலவே இந்நாளும் புனிதமாகவே யிருக்கும்.

### கதர்க்குறைவு.

அகில இந்திய நூற்போர் சங்கத்துக்குக் கதர் வேண்டி ஏராளமான கடிதங்கள் வருவதாகவும், சமீபத்தில் போதிய கதர் இல்லாது போகுமென்றும், எனவே கதர் உடுத்துவோர் தங்கள்உடைத் தேவையைக் குறைத்துக் கொள்ள வேண்டுமென்றும், கதர் உற்பத்தியில் ஜனங்கள் ஈடுபட வேண்டும் என்றும் மகாத்மா எழுதுகிறார்,

### மீராபாய் தலைவியல்ல.

மகாத்மாஆசிரமத்தை விட்டுப்புறப்பட்டதும், மீராபாய் ஆசிரமத் தலைவியாயிருப்பதாகப் பத்திரிகைச் செய்திகள் சில கூறின.

அது தவறென்றும் மகாதேவதேசாய்தான் தலைவரென்றும் மகாத்மா தெரிவிக்கிறா

### நிலமதிப்பு, சமாதானம், செஞ்ப்பு

பொருளாதார நிபுணர் திரு ஜே. ஸி குமரப்பா "யங் இந்தியா" வில் ஏற்கனவே சில கட்டுரைகள் எழுதி இந்தியாவின் தற்பொழுதைய வறுமையை விளக்கியிருந்தார். காந்தியிடம் அன்பும் மதிப்பும் உடையவரும், வயது சென்ற முதியவருமான திரு, பென்னிங்டன் என்னும் ஐரோப்பியர் 'யங் இந்தியா'வுக்கு அடிக்கடி கடிதம்எழுதுவது வழக்கம். திருநெல்வேலியில் ௧௮௦௦-ம் ஆண்டில் விலை போகாத ஒரு ஏக்கர் நிலம் ௧௮௭௦-ம் ஆண்டில் இருப்புப் பாதை போடுவதற்காக ௧௦௦௦ ரூபாய்க்கு விற்கப்பட்டதாகவும் நில விலை உயர்வது செழிப்பைக் காட்டுவதெனவும் திரு, பென்னிங்டன் குறிப்பிட்டு ஓர் கடிதம் சமீபத்தில் எழுதியிருந்தார், நில விலை உயர்வு செல்வச் செழிப்பைக் காட்டுமென்பது தவறெனவும், ஒரு இடத்தில் நடப்பதையே பொது விதியாகக் கொள்ளுவதும் தவறெனவும் திரு குமரப்பா இப்பொழுது விளக்கியுள்ளார், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் திரு, பென்னிங்டனுக்கு நம்பிக்கையிருப்பதால், இந்தியாவின் அமைதியே ஓர் மூலதனம் எனக் கருதுவதையும் தவறென திரு குமரப்பா கூறுகிறார், இயல்பான அமைதியல்ல இது வெனவும், இந்த அமைதி நாட்டின் மூலதனமாகாததுடன் நஷ்டமுமாகும் என்பதும் அவர் கருத்து,

---

### தூத்துக்குடி அரசியல் மகாநாடு.

தூத்துக்குடித் தாலூக்கா அரசியல் மகாநாடு தூத்துக்குடியில் ஏப்ரல் ௫, ௬-௨களில் கோபாலசாமி நாயக்கர் தெருவில் அமைக்கப் பெற்றிருக்கும் பந்தரில் நடைபெறும், திரு வி. ராஜகோபாலாச்சாரியார் தலைமை வகிப்பார் திரு வீரபாகு பிள்ளை உபசரணைத் தலைவர். திரு பெ. கந்தசாமி பிள்ளை காரியதரிசி என்று அறிவிக்கப்படுகிறது.

### தேவகோட்டை டெப்டி கலெக்டர்

தேவகோட்டை டெப்டி கலெக்டராக திருவாளர் கோவில்பிள்ளை யவர்கள் இம்மாதம் ௧௧-ம் தேதி திங்கட்கிழமை, திருவேங்கடமுதலியா ரவர்களிடமிருந்து சார்ஜ் ஒப்புங்கொண்டார். திரு கோவில் பிள்ளையவர்கள் தேவகோட்டை கருவூர் பழனியப்ப செட்டியார் வீதியில் முத்து கரு. அரு. மாணிக்கம் செட்டியார் அவர்கள் பங்களாவில் ஜாகை வைத்துளார். கோர்ட்டும் அங்கேயே நடாத்தப்படும் எனவும் தெரிகிறது.

திரு சி. திருவேங்கட முதயாரவர்கள் திருநெல்வேலி பொக்கிஷ டெப்டி கலெக்டராக மாற்றப் பட்டுளரர் எனவும் தெரிகிறது.

---

### பேர்சியாவில் தேசீயம்.

பெர்ஷியாவிலுள்ள எல்லா அரசாங்க உத்தியோகஸ்தர்களும், தங்கள் நாட்டில் செய்த ஆடைகளையே வாங்கவேண்டுமென உத்தரவளிக்கப்பட்டிருக்கிறது,

### கோவில் பிரவேசம்.

பம்பாயிலுள்ள கோவில் வாசல்கள் முன்னர் சத்தியாக்கிரகம் செய்யும் தீண்டாதார்களை மார்ச்சு ௨௯-ம் நாள் சநாதனதர்மிகள் என்பார் சென்று அடித்தார்களாம், ஆனால் சத்தியாக்கிரகிகள் மிக அமைதியாக அதனைப் பொறுத்துக்கொண் டிருந்தார்களாம், கான்பூரிலுள்ள ராதாகிருஷ்ணன் கோவில் பாபு பகவதி சரண் அவர்களால் தீண்டாதார் முதலிய அனைவரும் செல்லும்பொருட்டுத் திறந்து வைக்கப்பட்டது,

---





நடராஜ ஆலயத்தைப் பார்வையிட்ட பின்னர், கவர்னர் பகல் மணி ௧௦—௧௫-க்கு அண்ணாமலை நகர் எய்தினர். ரயில்வே ஸ்டேஷனிலிருந்து பல்கலைக் கழகத்திற்கு சுமார் ஆறு பர்லாங் தூரமிருக்கும். இப்பாதை பலவகையான வரவேற்பு வளைவுகளாலும், தோரணங்களாலும், அலங்கரிக்கப் பட்டிருந்தன. பல்கலைக் கழகக்கட்டிடங்களும், மிகவும் அழகாக அலங்கரிக்கப்பெற்று பொலிவுற்று விளங்கின.

### கவர்னர் வரவேற்பு.

கவர்னர் வந்து சேர்ந்ததும், புரோசான்சலர் செட்டிநாட்டு ராஜா, வைஸ் சான்சலர் எஸ். ஈ. ரங்கநாதம், குமாரராஜா முத்தையா செட்டியார், ரெஜிஸ்திரார் விஸ்வநாத ஐயர், கழகப் போசிரியர்கள் முதலியோரால் வரவேற்கப் பட்டு, பல கட்டிடங்களையும், கழகத்தின் ஒவ்வொரு இலாகாவையும் பார்வையிட்டார். பிறகு கவர்னரும் பரிவாரங்களும் செட்டிநாட்டரசரோடு விருந்துண்டார்கள். அப்பொழுது பல பிரபலஸ்தர்கள் விஜயஞ் செய்திருந்தார்கள்.பெண் மணிகளும் பலர்காணப் பட்டனர்.

### திறப்பு வைபவம்.

பகல் மணி ௧௦—௧௫-க்கு செனட் சபை, மண்டபத்தில் பெருந்திரளான கூட்டம் கூடிற்று. அப்போது மே. த. சான்சலர் சர் ஸ்டான்லி அவர்களும் புரோசான்சலர் ராஜா அண்ணாமலை அவர்களும் வைஸ் சான்சலர் எஸ். ஈ. ரங்கநாதன் அவர்களும் விலையுயர்ந்த சான்சலர் பதவிக்குரிய கௌன் முதலிய விருதுகளுடன் சபை மண்டபத்தில்வந்து தங்கள் இருப்பிடங்களில் அமர்ந்தார்கள். அப்போது சென்னைப் பல்கலைக் கழக உபசான்சலர், கெ. ராமுண்ணிமேனேன். ஆந்திர சர்வகலாசாலை உபசான்சலர் சி. ஆர். ரெட்டி, கொல்லங்கோடு ராஜா, சி. ஈவுட், சென்னை லார்டு பிஷப், டாக்டர் லக்ஷமணசாமி முதலியார், சத்தியமூர்த்தி முதலிய பல பிரபலஸ்தர்கள் வந்திருந்தார்கள்.

முதலாவதாக, பல்கலைக் கழகத்தை நிறுவிய செட்டிநாட்டரசர் தமது அறிக்கையை வாசித்தார்.

### செட்டிநாட்டரசர் பேருரை.

மேன்மைதங்கிய கவர்னர் அவர்களே!

இப்பல்கலைக் கழகமானது தோன்றியதற்கு இரண்டு காரணங்கள் உள. அவற்றைத் தங்கள் அனுமதியோடு இன்றுஇங்குகுறிப்பிடவிரும்புகிறேன். முதன்மையானதும், முக்கியமானதும் தனி மனிதர்களால் பொது நன்மைக்காகச் செய்யப்படும் முயற்சிகளில் அரசாங்கத்தார் மனப்பூர்வமாக உடனே ஊக்கத்துடன் உதவியளிக்க முன்வந்தது. இரண்டாவது, இம்மாகாணத்திலும், வெளியிலுமுள்ள ௧௮௦ லட்சம் தமிழ் பேசும் மக்கள் தமிழ்அறிவு, இலக்கியம், கேள்விச் செல்வம் ஆகியவற்றின் பெருமையை உலகிற்கு விளக்கிட ஓர் கல்வி நிலையம் தோற்றுவித்து வளர்த்தல் வேண்டுமென்ற ஆசை.

### தமிழ் பல்கலைக் கழகம்.

தமிழ் பல்கலைக்கழகம் தோற்றுவித்தல் வேண்டுமென்ற எண்ணம் இக்கழகத்தைத் தோற்றுவித்த கல்லூரி நிறுவியபோதேயிருந்ததொன்று. சில ஆண்டுகட்கு முன்னர், சென்னை பல்கலைக்கழக செனட் கூட்டத்தில், தமிழ் சர்வகலாசாலை ஆரம்பிக்கும் விஷயம் ஆலோசிக்க வேண்டுமென ஓர் தீர்மானம் கொண்டுவரப்பட்டது. மொழி சம்பந்தப்பட்ட ஓர் பல்கலைக்கழகத்தை ஆந்திரர்கள் தோற்றுவிக்க எண்ணி ௧௯௨௫-ல் ஆந்திர பல்கலைக் கழகம் வெற்றியுடன் நிறுவியது வரையில், இத்திட்டம் பற்றிய விபரம் இடையே கல்வியாளர் பலரால் பொது மக்கள் கவனத்திற்குக் கொண்டுவரப் பட்டது. ௧௯௨௬-ல் தமிழ் ஜில்லாக்களுக்காக ஓர் பல்கலைக் கழகம் ஏற்படுத்தும் பொருள்பற்றி ஆராய ஓர் கமிட்டியை அரசாங்கத்தார் நிறுவினர். அக்கமிட்டி முன் சாட்சி கூறியவர்கள் பெரும்பாலும் பல காரணங்களால் தமிழ் ஜில்லாக்கட்கு ஓர் தனியூனிவர்சிட்டி வேண்டுமென அபிப்பிராயப் பட்டார். குருகுல முறையில் போதிக்கப்படும் (யூனிட்டரி யூனிவர் சிட்டிகள்) ஏற்படுத்துவதே சிறந்ததென்றும், நல்லமுறையில் நடாத்த வசதியிருப்பவை எத்தனை இருக்கின்றனவோ அவ்வளவும் நன்று என்றும் கமிட்டியார் அபிப்பிராயப் பட்டனர். ஆனால் அத்தகைய பல்கலைக் கழகம் ஒன்றுக்கேனும் போதிய பொருள் வசதிகிடைக்கும் முறையினைத் திட்டமாகக் கூறமுடியாதென்றும் அவர்கள் அபிப்பிராயப்பட்டனர். எனினும் அத்தகைய பல்கலைக் கழகம் ஒன்று தனி மனிதர் ஒருவர் முயற்சியை சென்னை அரசாங்கத்தார் வரவேற்றதால் ௧௯௨௮-ல் நிறுவ முடிந்தது.

### கல்லூரியின் ஆரம்பம்.

எனது பெருமைவாய்ந்த சகோதரர் காலஞ்சென்ற திவான்பகதூர் சா. ராம. ராமசாமிச் செட்டியார் அவர்கள் ௧௯௧௪-ல் அரைகுறையான ஓர் செகண்டரி பாடசாலையின் பொறுப்பை ஏற்று, குறுகிய காலமாகிய நான்கு வருடங்களுக்குள் அதனை ஓர் சிறந்த—முற்றுப்பெற்ற—செகண்டிரி பாடசாலை யாக்கினர். அவர்வேலையைத் தொடர்ந்துசெய்ய அவர்கட்கு நீண்ட ஆயுள் இல்லாது போயிற்று. எனவே, அதனை ஓர் ஹைஸ்கூலிலிருந்து காலேஜாக உயர்த்தும் வேலையை நான் எடுத்துக்கொண்டேன். அதனை அரசாங்கத்தாரும் கல்வி நிபுணர்களும் நன்கு வரவேற்றார்கள். எனவே, ஓர் முதல்வகுப்பு காலேஜ் ஏற்படுத்த வேண்டும் என்ற எனது நீண்டநாள் அவாநிறைவேற ஓர் தக்க சந்தர்ப்பம் கிடைத்தது. சிதம்பரத்திற்கு அருகாமையில் ஓர் நிலம்வாங்கப் பட்டு, ௧௯௨௦, ஜூன் ௨௪-ம் நாள், ௫௮ மாணவர்களும் ௧௧ ஆசிரியர்களும் அடங்கிய இரண்டு இண்டர் மிடியட் வகுப்புகளோடு காலேஜ் ஆரம்பிக்கப்பட்டது.

### முந்திய வரலாறு.

இந்நிலையம் ௧௯௩௦-மார்ச்சு ௨௪வது தேதிவரை வளர்ச்சிபெற்ற வரலாற்றை சுருக்கமாக அறிவிக்க விரும்புகிறேன். ௧௯௨௨-ல் முதல்வகுப்பு காலேஜ் ஆரம்பமாயிற்று. ௧௯௨௩-ல் இண்டர் மீடியட் வகுப்பில் 'சயன்ஸ்' பயிற்சி ஆரம்பிக்கப்பட்டது. ௧௯௨௫-ல் இங்கிலீஷ் சரித்திரம், பொருளியல் நூல் ஆகிய பொருள்பற்றிய பயிற்சிக்காக ஆனர்ஸ் வகுப்புகள் ஏற்படுத்தப்பட்டன. ௧௯௨௬-ல் பி எ வகுப்பில் சயன்ஸ் பாடங்கள் ஆரம்பமாயின. ௧௯௨௭-ல் கீழ்நாட்டுக் கல்வி தற்கால முறையில் புகட்டுதற்குவடமொழி, தமிழ்மொழிக் கல்லூரிகள் ஆரம்பிக்கப்பட்டன.ஆந்திரர்களின்உதாரணத்தால்ஊக்கமளிக்கப் பட்டும், தமிழ் யூனிவர்சிட்டி கமிஷன் முன்னர் சாட்சியம் கூறிய தமிழர்களில் பெரும்பாலோர் ஒரே பான்மையாகக் கொண்டுள்ள ஆசையால் தூண்டப்பெற்றும், கல்வித்துறையில் பேரறிவுபெற்ற அறிஞர்கள் ஆலோசனை கூறி உதவியளித்தமையாலும், அரசாங்க அங்கத்தினர்கள் போதர ஆலோசனை ஆகியவற்றால் உதவி புரிந்தமையாலும் ௧௯௨௮-வது வருட ஆரம்பத்தில் அரசாங்கத்தார் முன்னர் பல்கலைக்கழகம் பற்றிய ஓர் திட்டம் எனக்குக் கொண்டுவர இயன்றது. அப்போது கவர்னராகவிருந்த லார்டு கோஷன், அவரது நிர்வாகசபை அங்கத்தினர்கள், கல்வி மந்திரியாகிய குமாரமங்கலம் ஜமீன்தார், பொருளாதார அங்கத்தவரான கௌரவ சர் தாமஸ் மாயர் ஆகியோர், இருபது லட்சம் ரூபாயும், கட்டிடங்கள், நிலம் முதலிய எல்லா தளபாடங்களுடன் கூடிய மூன்று காலேஜுகளும் கொடுப்பதற்காக முன்வந்த எனது வேண்டுகோளை மகிழ்வுடன் ஏற்றனர். ஏற்று இது வகைக்கு அரசாங்கத்தார் உதவியை ௨௭ லட்சமாக உயர்த்தி அதுபற்றிய மசோதாவை அதன் பல நிலையில் உதவிபுரிந்தும் வந்தார்கள்.

### நன்றியறிவிப்பு.

இத்தருணம், இப் பல்கலைக்கழகத்திற்கு சென்னை சட்ட சபைத் தலைவரும் அங்கத்தினர்களும் செய்த உதவிக்காக நன்றி பாராட்ட வேண்டியது கடமையாகும். செலக்ட் கமிட்டியின் ஆலோசனையிலிருக்கும் போதும் சட்டசபையில் விவாதத்திற்கு வந்தபொழுதும் மசோதாவானது எல்லாப் பிரிவினர்களின் ஆதரவையும்பெற்றிருந்தது. அத்தருணம் யாவற்றையும் விடக் கூடுதலாக எம்மனதில் பதிந்தது சட்டசபையில் இது விஷயம் வந்த போது கட்சிவேறுபாடுகள்எதுவும்காணப்படவில்லை என்பதே. உத்தியோகஸ்தர்களல்லாதவர்களும் மசோதாபற்றிய விவாதத்தில் கலந்து அதனை செப்பனுறச்செய்வதற்கு வேண்டும் உதவிபுரிந்தார்கள். குறிப்பிட்ட மூன்று மாதங்களில், மூன்றே கூட்டங்களில் இம் மசோதா சட்டமாக்கப் பட்டது.

சட்டசபை அங்கத்தினர்கள் அனைவருக்கும் இத் தருணத்தில் மசோதாவை நிறைவேற்றுதற்கும் அதில் பல அபிவிருத்திகள் செய்ததற்கும் நன்றிபாராட்டிக் கொள்ளுகிறேன்.

### சட்டத்தின் சிறந்த தன்மை.

சட்டத்தின் சிறந்த பகுதிகள் (க) ஆராய்ச்சிசெய்வதற்கு வேண்டிய வசதி யளித்திருப்பது. (உ) பல்கலைக் கழகச் சம்பந்தமான பல பகுதிகளில் ஆசிரியர்கட்கு நிர்வாக அதிகாரமளித்தல்—தற்போதுசிண்டிகேட்டில் ௧௦-ல்-௮-ம் அகடெமிக் கௌன்சியில் ௧௫-ல் ௨௮-ம் செனெட்டில் ௭௦-பேருக்கு ௨௯-ம் பேர்களிருக்கிறார்கள். (௩) குருகுலமுறையில் மாணவர்கள் வாசத்திற்கு வசதியோடு கூடிய பல்கலைக் கழக அமைப்பு. இங்கு ஆசிரியர்களும் மாணவர்களும் ஒன்றாக நெருங்கி வாழ்வதற்கு வேண்டும் வசதிகள் உண்டு. (௪) பண்டைய கீழ்நாட்டுக்கலைகளை வளர்த்தற்கு தனிப்பட பரிட்சைகள் ஏற்படுத்தல் (௫) பல்கலைக் கழகப்பொருளாதார நிலை நன்னிலைமையில் இருத்தற்கு எண்டோமெண்ட் ஏற்படுத்தி, பொருளாதார கமிட்டியின் ஆலோசனையின் பேரில் பல்கலைக் கழகத்தின் குழந்தைப்பருவத்தைப் பாதுகாத்தல்.

### முதல் வருட முயற்சிகள்.

ஐயா! தற்போது என்னச் செய்யப் பட்டிருக்கின்றன; இன்னும் யாது செய்யப்பட வேண்டும் என்பதைச் சிறிது விளக்க விரும்புகிறேன். பல்கலைக் கழகம் ஆரம்பிக்கப்பட்ட இம் முதல் வருடத்திலேயே ஆராய்ச்சி இலாகா ஏற்படுத்த வேண்டும் முயற்சிகள் செய்யப் பட்டிருக்கின்றன. புத்தக நிலையத்திற்கு வருடமொன்றுக்கு ரூ. ௩௦,௦௦௦ க்கான புத்தகங்களும் ௧௫-மாணவர்கட்கு ஒரு ஆசிரியர் வீதமிருக்க ஏற்பாடும் செய்யப் பட்டிருக்கின்றது. கட்டிடத் திட்டத்திற்கு, சுமார் ௨௪ லட்சம் செலவாகும் என எதிர்பார்க்கப் படுகிறது. இவ்விடத்தின் நிலையைச் செம்மைப்படுத்த, வடிகால் திட்டம், தண்ணீர் வசதி, மின்சார விளக்குத் திட்டம் போடப்பட்டிருக்கின்றன. தற்போது ௫௦ மாணவர்கட்கும் ௧௨ ஆசிரியருக்கும் வீட்டு வசதி யளிக்கப் பட்டிருக்கின்றது. யூனிவர் சிட்டி நிலத்தின் தற்போதுள்ள விஸ்தீரணம் சுமார் ௨௫௦ ஏக்கர், இதில் ஒரு பகுதி இன்னும் சேர்க்கப்பட வேண்டும். கூடுதல் நிலம் சேர்க்கப்பட்டதும் நீந்தல், படகுவிளையாட்டு, முதலிய பலவகை பயிற்சிக்கான ஏற்பாடுகள் செய்யப்படும். பரந்த நோக்கமும் சிறந்த அனுபவமும் அறிவும் வாய்ந்த மக்களோடு மாணவர்கள் நெருங்கிப் பழகுதற்காக, அயல்நாட்டுக் கல்விப யின்ற பல அறிஞர்கள் பெரும்பாலும் எல்லாக்கலைப் பகுதிகளிலும் ஆசிரியர்களாக ஏற்படுத்தப் பட்டிருக்கிறார்கள். வாழ்க்கைக்கான செலவுகள் எவ்வளவு குறைக்க முடியுமோ அவ்வளவும் குறைக்கவே பட்டிருக்கின்றன. இவ்வேலைகள் யாவற்றிலும் அரசாங்க ஆதரவை எதிர்பார்த்திருக்கின்றோம். இப் பல்கலைக் கழகத்தின் பொருளாதார நிலைமை சரியாக விருப்பதற்கு ஆரம்பத்தில் அரசாங்கத்தார் அளித்த உதவியேயாகும். இப் பல்கலைக்கழகம் தமது குறிக்கோளை முற்றுப்பெறச் செய்ய, இதனைத் தோற்றுவிக்கஉதவிசெய்த முதல் சான்சலர்லார்டு கோஷன் அவர்களைப் போன்று மேன்மைதங்கிய தாங்களும் இதுவகையில் நல்லூக்கம் எடுத்துக் கொள்ள வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளுகிறேன். பெரும் அலுவல்களுக்கிடையே தாங்கள் இங்கு வந்திருக்கிறீர்கள் என்பதை நான் அறிவேன். தாங்கள் இங்கு விஜயஞ் செய்திருப்ப தினின்று மே

(தொடர்ச்சி பின் பக்கம்.)

# அண்ணாமலைப்பல்கலைக்கழகம்.

## செனட் சபை ஆரம்பம்.

பல்கலைக் கழகத்தின் வரலாறு.

(நமது விசேஷ நிருபரிடமிருந்து)

## கடிதம்.

### திருசிரபுரம் தெப்போற்சவம்.

திரிசிரபுரம் ஸ்ரீ மாதுர் பூதேசுவரஸ்வாமியின் தெப்போற்சவம் பங்குனிமீ உகூ-உ நடைபெறும் என அறிவிக்கப்படுகிறது.

### காந்தி நிலையம், சிராவயல்.

காந்தி நிலையத்தின் நான்காவது ஆண்டு விழா சுக்ல பங்குனி கக-ம் நாள் செவ்வாய்க்கிழமை நிலையத்தின்கண் தேசபக்தர் திருவாளர் பொ. திரிகூடசுந்தரன் அவர்கள் (எம். ஏ; பி. எல்,) தலைமையில் நடைபெறும்.

அத்தருணம் மாணவர்கள் பேச்சு, பாட்டு நடிப்பு முதலியனவும் 'துருவன்' எனும் நாடகமும் நடைபெறும் என்று கு. கும்பலிங்கம் (அமைச்சன்) அறிவிக்கிறார்.

### ஜெயங்கொண்டபுரம்.

இத்திங்கள் கO-ம் நாள் இவ்வூர் இராமநாதன் கலாசாலையில் மாலை ச-௩Oமணிக்கு மாணவர்களால் ஓர் கூட்டம் நடாத்தப் பெற்றது. அக்கூட்டத்திற்கு கழனிவாசல் காந்தி பள்ளிக்கூடத் தலைமை ஆசிரியன் இராமகிருஷ்ணன் அவர்கள் தலைமை வகித்தார். கோபம் என்னும் பொருள்பற்றி மார்க்கண்டன் பேசினன் மாணாக்கரனைவரும் கோபத்தால் விளையும் தீமைகளை நன்கு விளக்கிப் பேசினார்கள். பின் ஆசிரியர்களான குருசுவாமி, பாலசுப்பிரமணியன் ஆதியோர்கள், பல ஆராய்ச்சிகளுடன் பேசினார்கள். அப்பால் தலைவரவர்கள் முடிவுரையுடன் கூட்டம் இனிது கலைந்தது என்று ரா பாலசுப்பிரமணியன் அறிவிக்கிறார்.

### புதுவயல்.

ஸ்ரீசரஸ்வதிசங்கம்:— இச்சங்கத்தின் ஏழாவதாண்டு பதினோராவது மாதக் கூட்டம் இறைவனருளால் சுக்கில ஆண்டு பங்குனித் திங்கள் முதல்நாள் வெள்ளிக்கிழமை மாலை ௫-மணிக்குமேல் ஏ பெரி பங்களாவில் திரு அழ சு சோமசுந்தரச் செட்டியாரவர்கள் தலைமையிற் கூடப்பெற்று முறையே மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம், பெண் கல்வி, வட்டித்தொழில், கற்றோற்குச்சென்ற விடமெல்லாம் சிறப்பு என்ற விடயங்களை திரு சங்கரகாமேஸ்வரன், வீர இராமசாமி பழ வீரப்பன், வீர சேது ஆகியவர்கள் பேசியபின் தலைவரவர்கள் முடிப்புரையுடன் சபை நன்கு நிறைவெய்தியது என சங்கத் தலைவர் அறிவிக்கிறார்

இச்சங்கத்தின் எட்டாவதாண்டு விழா வரும் பிரமோதூத ஆண்டு சித்திரைத் திங்கள் முதல்நாள் ஞாயிற்றுக்கிழமை மாலையில் திருநெல்வேலி திரு பொ திரிகூடசுந்தரம் பிள்ளை (எம் ஏ பி எல்) அவர்கள் தலைமையில் நடைபெறும்.

### இரங்கூனுக்கு உண்டியல் எழுதுபவர்கள் கவனிக்க வேண்டிய விஷயம்.

பர்மாநாட்டுக் கோட்டைச் செட்டியார் சங்கக்காரியதரிசி அறிவிப்பதாவது:—இரங்கூனில் பணம் கொடுக்கும்படி நமது ஊர்களில் எழுதிக் கொடுக்கும் உண்டியல்கள் பெரும்பாலும் சிலகாலமாக இங்கு இம்பீரியல் பேங்கிற்கு பணம்வசூலிக்க வருகின்றன. அவ்வித உண்டியல்கட்கு இம்பீரியல் வங்கியில் கொண்டுவந்து பணம் கட்டும்படி சில மாதங்கட்கு முன் வற்புறுத்தி வந்தார்கள் அதனால் சிரமம் ஏற்படுவது கருதி இம்பீரியல் வங்கி ஏஜண்டைக் கண்டு பேசியதில் அது முதல் செட்டியார் கடைகளிலேயே வங்கிக் காரர்கள் வந்து வசூலித்துச் செல்வதென முடிவுசெய்யப் பெற்றது. இப்பொழுது அதைமாற்றி மறுபடியும் வங்கியிலேயே கொண்டுவந்து கட்டும்படி சொல்லுகிறார்கள். அவ்விதம் செய்யமுடியாதென சொல்லிக் கொண்டிருக்கிறோம். வங்கிக்காரர்கள் இனிமேல் எழுதிவாங்கும் உண்டியல்களில் இம்பீரியல் வங்கியில் கொண்டுவந்து கட்டும்படி எழுதிவாங்க எத்தனிக்கிறார்கள்.

### சிவகங்கையில் கிளைக்காரியாலயம.

ரங்கூன் மொகல்ரோட் உ.அ-நிம்பர் மேல் வீட்டில் மெஸ்ஸர்ஸ் கே ஆர் அய்யங்கார் அண்டு கணேசய்யர் என்ற விலாசத்தில் [illegible] நடத்திவரும் ஆடீட்டர்கள் இப்போது பல நண்பர்களின் வேண்டுகோளின் [illegible] சிவகங்கையில் ஒரு கிளை [illegible] ஏற்படுத்தியிருக்கிறார்கள் என்று அறிவிக்கப்படு[illegible]

## அண்ணாமலை பல்கலைக் கழகம்.

(ககம் பக்கத் தொடர்ச்சி)

இந்நிலையம் பற்றி தாங்கள் கொண்டுள்ள ஆர்வம் நன்கு விளங்குதலோடு எங்களுக்கும் பெரும் உணர்ச்சியளிக்க ஏதுவாக விருக்கின்றது. இவ்விழாவை வெற்றியுறச்செய்ய பெரும் சிரமத்துடன் இங்கு வந்திருப்பவர்கள் அசௌகரியங்களையும் அறிவேன். எனவே, மிகக் குழந்தைப் பருவத்திலுள்ள இப் பல்கலைக் கழகத்தின்பால்—தென் இந்தியாவிலே இத்தகைய நிலையம் இது ஒன்றே இருப்பதால்-இதனை அதன் சான்சலர் எத்தகைய ஆதரவு அளித்தல் அவசியமோ அத்தகைய ஆதரவு அளிக்கவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இவ்வார்த்தைகளோடு, மேன்மை தங்கிய தாங்களை இப்பல்கலைக் கழகத்திற்கு வரவேற்கிறேன்."

பின்னர், உபசான்சலர் திரு. ரங்கநாதம் அவர்கள், சென்னை, ஆந்திர பல்கலைக்கழகத்தாரால் அனுப்பப் பெற்ற மங்கலச்செய்திகளை வாசித்தார்.

அப்போது மே. த. கவர்னர் நிகழ்த்திய விரிவுரையின் சாரமாவது:—

### கவர்னர் பேருரை.

ஓர் பல்கலைக் கழகத்தை ஆரம்பித்து வைக்கும் பாக்கியம் ஒருவருக்குக் கிடைத்தல் மிகவும் அருமை. மகிழ்ச்சியான ஓர் சந்தர்ப்பத்தினிடையே ஆரம்பிக்கப்படும் இத்தகைய பல்கலைக் கழகத்தை ஆரம்பித்து வைத்தல் அதினும் மிகஅருமை. நீங்கள் யாவரும் என்னைப் போன்று இவ்வரிய சந்தர்ப்பத்தின் அருமை உணர்ந்திருக்கிறீர்கள் என்று நான் திட்டமாக எண்ணுகிறேன். இன்று நாம் இங்கு செனட் சபை—அதாவது பல்கலைக் கழக நிர்வாக சபை—ஆரம்ப விழா நடாத்த கூடியிருக்கிறோம். இந்நிலையம் நன்கு அமைக்கப்பட்டிருப்பதோடு, நன்கு வளர்ச்சி பெற்று இத்தமிழ் நாட்டின் கலையும் கேள்வி செல்வமும் தழைத்தோங்க ஓர் சிறந்த ஸ்தாபனமாக விருக்கும் என்றும் நம்புகிறேன்.

இப்பல்கலைக் கழகம் நிறுவுதற்கு முக்கிய காரணர், உங்கள் நகரத்தாரும், கௌரவ நண்பருமான ராஜா சர். அண்ணாமலைச் செட்டியார் அவர்களே. அவர் காலேஜ் கட்டிடங்களைக் கவர்மெண்டுக்குக் கொடுத்ததோடு உO லக்ஷ ரூபாய் மூலதனமும் கொடுத்தார். இவ்வளவு பொருள் கொடுக்க முன்வந்ததால் கவர்ன்மெண்டாரும் தயங்காமல் தாங்கள் கொடுக்கவேண்டிய தொகையையும் கொடுத்தனர். இப்போது சர்வகலாசாலை சம்பந்தமாகச் சட்டமியற்றியதற்குக் கவர்மெண்டாருக்கும் தலைவருக்கும் ராஜா சாகிப் நன்றி தெரிவித்துக் கொண்டிருக்கிறார். இவ்விதக் காரியத்திற்குத் தடைசொல்வோர் யாரிருக்கப் போகிறார்கள். இவ்விஷயத்தில் கவர்ன்மெண்டாரும் சட்டசபையினரும் பங்கெடுத்துக்கொண்டது அவர்களுக்கு ஒரு பெருமையே அளித்திருக்கிறது. பிரிட்டனில் இவ்விதச் சர்வகலாசாலைகள் பலவிருக்கின்றன. இம் மாகாணத்திலுள்ளவர்களுக்கு இம்முறையைப் பற்றி அதிகம் தெரியாது. இதுகுருகுலவாசத்தைப் போன்றது. இது கீழ்த்திசை நாடுகளின் நாகரிகத்துக்குப் பொருத்தமுடையது. இந்தச் சர்வகலாசாலையின் ஸ்தாபகருக்கு என்றும் அழியாத புகழ் ஏற்பட்டிருக்கிறது. இது சம்பந்தமாகச் சட்டசபையினரும்கவர்ன்மெண்டாரும் நிறைவேற்றியசட்டம் சென்னை சட்டசபை நிறைவேற்றிய சட்டங்களில் மிக முக்கியமானதாகும்.

சர்வகலாசாலையில் பட்டம் பெறுவதற்கான படிப்பைமட்டும் கற்பிப்பது போதாது. பிற்காலத்தில் மாணவர்கள் ஏற்றுக் கொள்ளக் கூடிய வாழ்க்கையைச் சீர்படுத்தக் கூடிய அறிவு இங்கு வளரவேண்டும். இத்தகைய அறிவு வளர்வதற்கு இந்த சர்வகலாசாலை ஏற்றவிடமாக விருக்கிறது. இங்கு எல்லாவித மாணவர்களும் வந்துகூட இடமிருக்கிறது. இங்கு தேகப்பயிற்சிக்கான வசதிகளும் செய்யப்பட்டிருப்பது விசேஷமே யாகும். இந்தச் சர்வகலாசாலை செனேட்சபையைத்திறந்து வைக்க எனக்குச் சந்தர்ப்பம் அளித்ததற்காக நான் இன்னொரு முறை வந்தனமளிக்கிறேன். இதன் ஸ்தாபகரையும் இந்த சர்வகலாசாலை ஸ்தாபிப்பதற்கு உதவிய மற்றவர்களையும் நான் பாராட்டுகிறேன்."

கவனர் பதிலளித்து முடிந்தவுடன் அன்னாருக்கு தங்கத்தினால் செய்த மாலை சூடப் பட்டது. வெள்ளிபெட்டி பரிசாகக் கொடுக்கப் பட்டது.





## கடிதம்.

### திருவனந்தபுரம்.

விசுவகர்ம பிரதிநிதிக்கு உபசாரம்:—இவ்வருட ஸ்ரீமூலம் பாப்புலர் அசம்பளி மெம்பர் மீனாக்ஷிபுரம் ஸ்ரீமாந் ஜோஸியர் ஆறுமுக ஆச்சாரியாரவர்களுக்கு ஓர் உபசாரம் செய்வதற்காக வஞ்சியூரில் திருவாளர் எம். முத்துசுவாமி ஆச்சாரியார் எம். ஏ. எல். டி. அவர்கள் வீட்டில் சென்றஞாயிறன்று மாலை மணி ஐந்துக்கு ஓர் பொது கூட்டம் கூடபட்டது. அவ்வமயம் ஏராளமான மக்கள் விஜயம் செய்திருந்தனர்.

இக்கூட்டத்திற்கு கனம் எஸ். ராஜகோபால் ஆச்சாரியார் பி. ஏ. தலைமைவகித்தார் தமது முகவுரை பிரசங்கத்தில் நமது பிரதிநிதியாக ஸ்ரீமாந் ஜோஸியர் எம் ஆறுமுகம் ஆச்சாரியார் அவர்களை கெவர்மென்டார் தெரிந்தெடுத்ததுபெரும் பாக்கியமென்றும். சமுதாய குறைபாடுகளை நீண்ட காலம் தம் பிதா அவர்களுடன் நன்குணர்ந்து அசமபளியில் தெரிவித்தது பற்றி சந்தோஷபடுகிறேன்"

பின்னர் ஸ்ரீமாந் எம், முத்துசுவாமி ஆச்சாரியார் எம். ஏ, எல், டி, அவர்கள் பேசியதாவது:—"கல்வி குறைவினால் நம் சமுதாயத்தார் பொது ஸ்தாபனங்களில் முயற்சி செய்யாமலும் அவைகளில் பங்குகொள்ளாமலும் காலங்கழிக்கின்றனர். எழெட்டுவருடங்களுக்குமுன் இத் திருவனந்தபுரத்தில் விசுவகர்மரில் ஓர் அங்கத்தினரை இச்சபைக்கு நியமனம் செய்யவேண்டுமென டிவிஷன் பேஷ்காரவர்கள் தாண்டுதலின் பேரில் தாசில்தார் இங்குள்ள நம்மவர்களை ஓர் கூட்டம் சாலை அம்மன் சன்னதியில் கூட்டிவைத்தனர். ஓட்டுரிமையானரும் மற்றும் பல ஆட்களும் குழுமி இருந்தனர், இதிலஒருவரை நீங்களே ஓட்டுமூலம் தெரிந்தெடுங்கள் என்றதும் அதிக ஓட்டுரிமைபெற்ற கனவான் இந்த மகத்தான பாரத்தை என்னால் சுமக்க முடியாதென்றும் அதைவகிக்க எனக்கு சக்தி இல்லை என்றும் மறுத்துவிட்டார். அந்த வருடத்தில் நமக்கு பிரதிநிதித்துவம் கிடையாமலே போய்விட்டது. பின்னர் நம் சமுதாயத்தில் பெரும் பண்டிதரான மீனாக்ஷிபுரம் ஸ்ரீமாந் முத்து ஜோஸியரவர்கள் இச்சபையில் விசுவகர்ம பிரதிநிதியாக முதலில்நியமனம் பெற்றார். நம் ஜாதியாரின் கல்வி குறைவைபற்றி வாதாடி இங்கிலீஷ் ஹைஸ்கூல்களில் நம் மாணவர்களுக்கு அரைபீசு ஆக்கிவைத்தார். அவர் காலஞ்சென்றபின் மூத்தபுத்திரர் ஸ்ரீமாந் ஜோஸியர் எம். ஆறுமுகம் ஆச்சாரியார் பொதுஜன சேவைக்கு முன்வந்ததுபற்றி அடங்கா ஆனந்தம் கொள்கின்றேன்"

பின்னர் திருவாளர்களான நாகலிங்காசாரியர், ஜோஸ்யர் சிவராம சுப்பிரமணிய ஆச்சாரியார் ஆகியோர் மிக அழகாகப் பேசினார்கள்.

சமுதாய பிரதிநிதி ஜோஸியர் எம் ஆறுமுகம் ஆச்சாரியாரவர்கள் பேசியசாரமாவது

இச்சிறியேனை அபிமானிக்கவென்று இக்கூட்டம் கூடியதற்காக நான் என்னுடைய மனமார்ந்த நன்றியை பணிவுடன் சமர்ப்பிக்கின்றேன். இப்பொழுது நீங்கள் அபிமானிப்பது கவர்மெண்டார் என்னை இந்தவருடம் அசம்பளியில் மெம்பராக நியமனம் செய்ததும் எனது தந்தையார் ஸ்ரீமாந் முத்து ஜோஸியரவர்களியற்றிய சமுதாயதொண்டை யொட்டியும் என்பதை நான் நன்கு உணர்ந்திருக்கின்றேன் அன்னவருடைய காலத்தில் அவர்களியற்றிய ஜாதி நூல்களும் சமுதாய முன்னேற்றத்திற்குள்ள பல உபந்நியாசங்களும் உழைப்புகளும் பலவுள வென்பது நமது சமூகத்தாருக்கும் மற்றும் பிரதானிகளும் அறிவர் இதில் எனது நண்பர்களும் சகோதரர்களுமாகிய தாங்கள் இவ்விதம் என்னை அபிமானித்து கைதூக்கி உயர்த்திவிடுவதால் எனக்கும் என்போன்ற மற்ற சிறுவர்களுக்கும் ஊக்கமுண்டாகி இன்னும் பன்முறை சமுதாய உழைப்புக்காக முன்வர வேண்டுமென்ற அவாவை அதிகரிக்க செய்கின்றது.

தலைவர், மெம்பர், முதலான ஏனையோர்களுக்கு பூமாலை அணியபெற்றும் இன்னிசைகருவிகளுடன் கூடிய சங்கீதக் கச்சேரியும் ஓர் சிற்றுண்டியும் எஸ் சுப்பையாச்சாரியாரவர்கள் நன்றி கூறுதலும் நடந்தபின் கூட்டம் மணி எட்டுக்கு இனிது நிறைவெய்தியது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.



## மதிப்புரை.

### சோதிடசாரப் பொக்கிஷமென்னும் எகூ-வருடப் பஞ்சாங்கம்.

[தொகுத்துப் பதித்து வெளியிட்டவர்:—சோதிட சாஸ்திரி எஸ். கூடலிங்கம் பிள்ளை. கிடைக்குமிடம்:—கே. சுந்தரம் கO, சொக்க கொத்தன் தெரு, மேலமாசி வீதி, மதுரை. விலை ரூ. எ—O—O.]

இதில் சென்ற ஆனந்த வருடத்திற்கு முந்திய ஆனந்த வருடம் துவங்கி, சமீப அட்சய வருடம் முடிய எகூ வருஷங்களின் பஞ்சாங்கமும், இங்கிலீஷ் கஅ௫ச-ம் வருஷம் துவங்கி ககூ௫ச-ம் வருஷம் வரை இங்கிலீஷ் வருடம் மாதம் தேதிக்குச் சரியான தமிழ் வருடம் மாதம் தேதிகளும், சோதிடர்களுக்குப் பயன்படும் வேறு பற்பல விஷயங்களும் அடங்கியிருக்கிறன. கிரௌன் க-க்கு ௨ அளவில் அளவில் ககஆச-பக்கங்கள் அடங்கிய பெரிய புத்தகமாக இது அமைந்திருக்கின்றது. முதல் நாற்பத்தெட்டுப்பக்கங்கள் சோதிடர்களுக்குப் பயன்படும் பல விஷயங்களும், பின்னர் பஞ்சாங்கப் பகுதியிலுள்ள எகூ ஆண்டுகளுக்கும் நவக்கிரக பாதசாரங்களும், பிறகு எகூ வருடப் பஞ்சாங்கங்களும், அதன் பின் மீதி ௨௭-வருடங்களுக்குத் தமிழ் ஆங்கிலத் தேதிகளும் அமைக்கப்பெற்றிருக்கின்றன. பஞ்சாங்கங்களடங்கிய ஒவ்வொரு மாதத்தின் பக்கத்திலும் கீழே சிறிது இடத்தில், விசேஷப் பண்டிகைகள் முதலிய புண்ணிய தினங்கள் தனியாகக் குறிப்பிடப் பட்டிருப்பதால், சென்ற வருடங்களில் எவ்வெப்பொழுது அவை வந்தன என்பதை யாவரும் தெரிந்து கொள்ளலாம். அன்றியும் இதில் இன்னோர் விசேஷம் யாதெனில், உலக சரித்திரத்திலேயே விசேஷ சம்பவங்கள் சிலவும் முக்கியமாகத் தென்னிந்திய சம்பவங்கள் பலவும் பஞ்சாங்கங்களில் ஆங்காங்கு குறிக்கப்பட்டிருப்பதாகும். உதாரணமாக, விக்டோரியா மகாராணி எப்பொழுது காலஞ்சென்றார்கள்? மதுரையிலிருந்து தூத்துக்குடி மார்க்கம் எப்பொழுது ரயில் விடப்பட்டது? வைகைப் பாலம் எப்பொழுது கட்டப்பட்டது? காங்கிரஸ் எவ்வெப்பொழுது எங்கே கூடியது? இவை போன்ற பல விஷயங்கள் ஆங்காங்கு குறிக்கப் பட்டிருப்பது, பஞ்சாங்கங்களின் பக்கங்களைத் திருப்பும் பொழுது, யாவருக்குமே சிறிது உற்சாகமும்உருசியும் அளிப்பதாயிருக்கின்றது. பொதுவாக,இந்தப் புத்தகம் சோதிடர்களுக்கு மாத்திரமல்ல, பல சம்பவங்களும், ௬OO-வருடத்திற்கு தமிழ் ஆங்கிலத் தேதிகளும் அடங்கியிருப்பதால், பொதுமக்கள் அனைவருக்குமேமிகப்பயன்படும். அன்றியும் லோகல் போர்டு முனிசிபாலிடி, கல்வியிலாகா, ரெஜிஸ்டிரேஷன் ஆபீஸ், கூட்டுறவுச் சங்கங்கள், லைப்ரரி முதலிய சர்க்கார்ஸ்தாபனங்களுக்கும் இது உபயோகமாயிருக்கும்.



### ஹஜ்ஜு யாத்திரை அல்லது ஹிஜாஸ் பிரயாணம்.

[இயற்றியவர்:—சைபுல் இஸ்லாம் ஆசிரியர் மௌலானா அஹ்மது ஸயீது சாகிப். கிடைக்குமிடம்:— சைபுல் இஸ்லாம் புக்டிப்போ, ௨௭, செம்புதாஸ் தெரு, ஜி. டி. சென்னை. விலை ரூ. O—௧—O.]

ஹாஜ் யாத்திரைசெய்ய விரும்பும் முஸ்லீம் பிரயாணிகளுக்கு மிகவும் உபயோகமாகும்படி இச் சிறு நூல் இயற்றப்பட்டிருக்கிறது. இந்தியாவிலிருந்து புறப்பட்டதுமுதல் திரும்பி வரும் வரையில், ஹாஜ் யாத்திரிகர்களுக்கு, கப்பல், ரயில், மோட்டார், ஒட்டகை முதலிய சாதனங்களிலும் வாகனங்களிலும் எவ்வெவ் விடங்களில் பிரயாணம் செய்யவேண்டி வருமென்ற விவரங்களும், செலவுதொகைகளும் இந்நூலில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. மேலும், ஹாஜ்யாத்திரிகர்கள் ஆங்காங்கு இயற்றவேண்டிய மதக்கடமைகளும் கிரியைகளும் யாவை என்பதுபற்றியும் சுருக்கமாக விளக்கப்பட்டிருக்கிறது. யாத்திரிகர்கள் கையுடன் கொண்டுபோக அவசியமான உடை முதலிய பொருள்களும் இதில் குறிப்பிடப் பட்டிருக்கின்றன. எனவே, இது ஹாஜ் யாத்திரை செல்லும் முஸ்லீம்களுக்கு அதிபவத்தில் உதவிசெய்யக் கூடிய ஓர் தோழனாக் விருக்கின்றது.

### சக்தி விஜயம்.

[ஆசிரியர்கள்:-சென்னை எம். எஸ். சுப்பிரமணிய ஐயர், சக்திநிலயம் பி. ஸ்ரீராமகோபால ஐயர். கிடைக்குமிடம்:-ஸ்ரீராமம், பாலையூர், முத்தப்பேட்டை வழி. வருடச்சந்தா உள்நாடு ரூ. உ—௦—௦; வெளிநாடு ரூ. உ—அ—௦.]

இந்தப் பத்திரிகை, ஒரு புதிய ஒளியையும், புதிய எழுச்சியையும் தமிழ் மக்களுக்கு உண்டாக்க் கூடிய முறையில் நடத்தப்படும் என்ற குறிகள் முதல் இதழிலேயே காணப்படுகின்றன. அதில் உள்ள கட்டுரைகள், ஓர் ஊக்கமும், உத்வேகமும் உடையனவாயிருக்கின்றன. சீர்திருத்தம், பெண்கள் விடுதலை, அரசியல் சுதந்திரம் முதலியவற்றிற்கு இது உழைக்கும். சுதந்திர எழுச்சியையும், கலை வேட்கையையும், சமூகச் சீர்திருத்த உணர்வையும் எழுப்பி; தேசிய முறையில் அவை சென்றுழைக்கத் தூண்டுவனவாக இதன் கட்டுரைகள் அமைந்து கிடக்கின்றன. தமிழர் யாவரும் இதனை ஆதரித்தல் கடன்.

### தியான மணிக்கோர்வை.

[இயற்றியவர்:-திரு. ஜே. எம். ஹென்மான் மேற்பார்வையின் கீழ் ஓர் சைவப் பண்டிதர். வெளியிட்டோர்:- கிறிஸ்தியன் லிடரச்சர் ஸொஸைட்டி, சென்னை. விலை ரூ. ௦—அ—௦.]

இயேசு கிறிஸ்துவின் ஜீவிய சரித்திரத்தின் சில முக்கிய சம்பவங்கள் கவியுருவம் தாங்கியிருக்கின்றன. மேலும், கிறிஸ்தவ வேதத்திலுள்ள சில சங்கீதங்கள் தமிழ்ப்பா வருவத்தில் ஆக்கப்பட்டிருக்கின்றன. கவிநயம் இல்லையாயினும், இயேசுவின் சரிதமாதலால்பொருட்சுவையில்லாமலில்லை.

### நவமணி.

[ஆசிரியர்:-சி, ராம. இராமனுசன்.கிடைக்குமிடம்:-நவமணி பத்திரிகாலயம், பள்ளத்தூர். வருடச்சந்தா உள்நாடு ரூ. க—௦—௦; வெளிநாடு ரூ. க—அ—௦.]

இப்பத்திரிகையில் அரசியல், இலக்கியம், சமூகச் சீர்திருத்தம் ஆகியன சம்பந்தமான கட்டுரைகள் வெளிவருகின்றன. ஓர் நீண்ட நாவலும் வருகிறது. புதிய கவிகளும் வெளியிடப்படுமென முதல்இதழ் காட்டுகின்றது. நல்ல கிளேஸ் கடிதத்தில் அச்சிடப்படுகிறது. நல்ல பொருள்கள்; அழகிய அமைப்பு; சிறிய உருவம்.

(௯-ம் பக்கத் தொடர்ச்சி)

னெம்புவதாயிருந்தால் ஜனங்களெல்லோரையும் கோர்ட்டினின்றும் வெளியேயகற்றிட நேருமென்றறிவீர்கள்! இது ஓர் நீதிமன்ற மென்பதையும் மேனாட்டு நாகரிகப்படியுள்ள சட்டசபை யல்லவென்பதையும் மறக்கவேண்டாம்!—நல்லது, தீர்ந்ததா உன் முடிவுரை, மாதே?

சாரதா:—ஆம்.

ஜட்ஜ்:—அடுத்த எதிரியைக் கவனிக்கலாமா?

சாரதா:—ஆம்.

ஜட்ஜ்:—சரி;— இனி இரண்டாவது எதிரி பேசலாம்.

பிச்சை:—நான் விரும்பவில்லை.

ஜட்ஜ்:—ஏன்?

பிச்சை:—தற்காலச் சட்டப்படி இரட்டை விவாஹக் குற்றத்தை நான் ஏற்றுக் கொள்ளுகிறேன். அதன்படியுள்ள முழுத் தண்டனையாகிய எழுவருஷக் கடுங்காவலையும் அபராதத்தையும் எனக்களியுங்கள்; இந்த சுதந்திரத் தியாகமே இந்த அழிந்து சிதைந்து போய்க் கொண்டிருக்கும் இந்து சமூகத்திற்கும் அதின் புழுத்த விவாஹச் சட்டத்திற்கும் என்னு லியற்றப்பட்ட பெருமை வாய்ந்த ஈமக்கடனாயிருக்கட்டும்.

ஜட்ஜ்:—பேசி முடிந்துவிட்டதா?

பிச்சை:—ஆம்.

ஜட்ஜ்:— கனவான்களே! என் முடிவுரையும் சுருங்கியதுதான். இந்த வழக்கின் சட்ட பாகத்தை மாத்திரமே எடுத்து விளக்க எண்ணியிருக்கின்றேன். அதில் வாதி நெறி தவறி நடந்திருப்பதாக ருஜூப்பட்டாலும் கூட அதனால் முதலாவது எதிரிக்குத் தன் கணவனை விட்டுப்பிரிந்திருக்க அதிகாரம்கிடையாது. தொற்றுவியாதியிருப்பதாக ருஜூவாகுமானால் மனைவிக்குப் பிரத்தியேக வாசத்திற் குத்தான் அதிகாரமுண்டு. ஆனால், புனர் விவாஹத்திற்கு ஒருகாலுமே அதிகாரமில்லை. இந்து சட்டப்படி புருஷனுயுள்ள மட்டிலும் ஸ்த்ரீயின் புனர்விவாஹம் குற்றமாகவே கணிக்கப்படும். புருஷன் இறந்திருந்தால் காரியம் வேறு; அப்பொழுது விவாஹம் நியாயமாய்விடும். அவ்விதம் இறவாத புருஷன் உயிருள்ளளவும் அவனுக்குத் தன் மனைவி மேல் வழக்குத்தொடர அதிகாரமுண்டு.



## மாங்கல்ய பேதம்.

இது கொஞ்சம் கடினமாகத் தோன்றலாமுங்களுக்கு. ஆயினும் இதுவே சட்டம். நீங்களினி யோசனைசெய்து எதிரிகள் குற்றவாளிகளா இல்லையாவென்று தெரிவிக்கக் கோருகிறேன். (உட்காருகிறார்).

ஒருகுரல்:—Stop !(நில்லுங்கள்)

ஜட்ஜ்:—என்ன அது?

அதேகுரல்:—நில்லுங்கள்! ஒரு சாட்சியம் கூட!

[கூட்டத்தைத் தள்ளிக்கொண்டு ஸாக்ஷிக் கூட்டை நோக்கிக் கமலம் விரைந்து வருகிறாள்.]

ஜட்ஜ்:—சாட்சியத்திற்குத் தருணம் தவறிவிட்டது.

கமலம்:—(விரைந்து சாக்ஷிக் கூட்டிற்குள்ளேறி நின்று) இது ஓர் முக்கியமான கேஸாகும், நியாயாதிபதி! ஒரு புறம் ஓர் கௌரவப் புருஷருடைய மானம், மற்றோர் புறம் இருவர்களுடைய சுதந்திரம்—இவைகளன்றோ ஊசலாடிக்கொண்டிருக்கின்றன?

கிட்டு:—ஐயோ! கமலாவல்லவா அது! இவளெங்கே வந்தாயிஞ்சே?

ஜட்ஜ்:— என்ன சொல்லுகிறீர்கள், வாதிவக்கீலவார்களே?

சர்க்கார் வக்கீல்:— (சுந்தரத்துடன் பேசிவிட்டு) இந்தச் சாக்ஷியை விசாரிப்பதில் ஆக்ஷேபனை யில்லையென்று ஸ்ரீ சுந்தரம் அபிப்பிராயப் படுகிறார்.

ஜட்ஜ்:— (பிச்சையையும் சாரதாவையும் நோக்கி) நீங்களென்ன சொல்லுகிறீர்கள்?

சாரதா:— எனக் கிதைப்பற்றிக் கவலையேயில்லை.

பிச்சை:—It's nothing to us (இதைப் பற்றி எங்களுக்குக் கவலையில்லை.)

கமலம்:— இந்த வாதி உயிருடனில்லாதிருப்பின், கோர்ட்டாரே, எதிரிகளுடைய விவாஹம் நியாயமா யிருக்குமா?

ஜட்ஜ்:— சந்தேகமன்றி!—ஆனால் யாவற்றிற்கும் முன்பு நீயாரென்றும் உனக்கிதிலென்ன சம்பந்தமென்றும் தெரிவி!

கமலம்:— யாவற்றிற்கும் முன்பாக நான் எதிரிகளுடைய விவாஹத்தை நியாயமாக்குகிறேன் எல்லோருமறிய!— (தன் ஆடைகளுக்கடியிலிருந்து ஓர் கைத்துப்பாக்கியை எடுத்து சுந்தரத்துக் கேதிரே காட்டி) தொலை, பாபீ! அவர்கள் விவாஹம் நியாயமாகட்டும்! (சுடுகிறாள். கூட்டிலிருந்து குதித்து வெளியே ஓடி வாயிலருகே நின்று கொண்டு) வாதியிறந்தான்— இனிக்கேஸ் போயிற்று!—ஒருவரும் இடத்தை விட்டு நகரவேண்டாம்—அருகில் வருபவரைச் சுடுவேன்—சாரதா, விடைபெற்றுக் கொள்கின்றேன்! பிராணநாதா, போய்வருகின்றேன்—நானிப்படித் துணிவேனென்று எண்ணியிருக்க மாட்டீர்கள்—என்னை மன்னியுங்கள்—எனக்கு வேறு கதியில்லை.— Farewell! (விரைந்து வெளியே ஓடிப்போகிறாள்)

கிட்டு:— (அவளைப்பின் தொடர்ந்து) ஐயோ, கமலா! கமலா! வெளியே போகிறார்).

(வெளியில் துப்பாக்கி வெடிக்கிற சப்தம் கேட்கின்றது.)

பிச்சை:— அதோ அவளும் தன்னைத் தானே சுட்டுக் கொண்டாள்.

சாரதா:—yes! —(கோர்ட்டு சேவகர்க[ள்] பிச்சையையும் சாரதாவையும் வெளியே போகச் சம்மதியாமற்றடை செய்கின்றனர்)

பிச்சை:— ஐயோ! அந்தப் பேதைப் பெண்ணுடன் ஒருவார்த்தை பேசவேண்டு மெங்களுக்கு!

ஜட்ஜ்:— ஐயோ! பாவம்! அந்த வாதியைப் பிடித்துக் கொள்ளுங்கள்! (அநேக வக்கீல்கள் சுந்தரத்தைத் தாங்கிக் கொள்கின்றனர்).

சுந்தரம்:— (மரண வேதனையுடன்) ஐயோ!—your honour-(கனம் நீதிபதியே! அப்பா!—கோர்ட்டைக் கலையாதீர்!—இறக்குமுன்—ஒருவார்த்தை! கடைசிவிருப்பம் ஐயோ!—

ஜட்ஜ்:—(உட்கார்ந்து) yes, friend! அப்படியே செய்கிறோம்; கோர்ட்டைக் கலைக்கவில்லை.

சுந்தரம்:—அப்பா!— கனவான்களே!— கோர்ட்டாரே!—எதிரிகளை விட்டு விடுங்கள்—குற்றம் என்னுடையதே!—ஒப்புக்கொண்டேன்—நான் பரிசுத்த இதயத்துடனுவது சாகிறேன்!.

ஜூரார்கள்:— (ஒன்று சேர்ந்து) அப்படியே செய்கின்றோம்!

சுந்தரம்:—அப்பா!–சந்தோஷமாயிறக்—

ஜட்ஜ்:— முடியாது! நான் அஸெஸர்களின் தீர்ப்பை நிராகரிக்கிறேன். சட்டம் யாவற்றையும் விடப் புனித மானது. யாருடைய மாணவாக்கு மூலத்தினாலும் மாற்றப்பட்டு விடாது. எதிரிகளுடைய குற்றம் ராஜியாய்ப்போக இடங்கொடுக்கக் கூடிய வகுப்பைச் சார்ந்ததல்ல. It's a non-compoundable offence. ஆகவே நான் எதிரிகளுக்கு சட்டப்படி எழுவருஷ கடுங்காவல் தண்டனை விதிப்பதோடு அவர்களுடை விவாஹத்தையும் ரத்து செய்திருக்கின்றேன்!

சுந்தரம்:— பிச்சை and! சாரதா!— என்னை மன்னிப்பீர்கள்!— will you? (மன்னிப்பீர்களா?)

சாரதா:— நாங்களும்மை மனப்பூர்வமாக மன்னிக்கிறோம்— இனி எங்களுக்கு நீர் பகைவனாக மாட்டீர்!

பிச்சை:— சுந்தரம், இவ்வுலக மனிதரும் உன்கடவுளும் உன்னை மன்னிக்கிறார்கள்—ஆனால் அந்தப் புழுத்த அநாகரீக இந்துச்சட்டம் மாத்திரம் மன்னியாதுன்னை—அதற்கு ஆத்மாவில்லை!

சுந்தரம்:— (மரண வேதனையில்) Farewell!— commend me to your fathers! ஆ!—(போகிறேன்; உங்கள் தந்தையரிடம் என்னைப்பாராட்டி யுரையுங்கள்) (இறக்கிறான்).

பிச்சை:— Three cheers for this Hindu Law of marriage! (இவ்விந்து மணச்சட்டத்திற்கு மும்முறை வாழ்த்துக் கூறுங்கள்)

சாரதா:— Hurrah! (வாழ்க!) (திரை)

முற்றும்.

Reg. No 1509. (16 Pages) Tel: "Oolian"

SUBSCRIPTIONS:
Annual subscription Rs. 5
Half yearly " Rs. 3
Foreign, Annual " Rs. 6

# ஊழியன்

ADVERTISEMENTS:
One inch, S. C, per insertion As 8
Court Notices, per inch Re 1
Long standing advertisements given concessions.

## The "Oolian," a Nationalist Weekly.

Editor: Raya. Chockalingan.

Truth Persists. Service Shines.

Vol. X. Karaikudi—Tuesday, April 1st 1930. No. 28.



ராய. சொக்கலிங்கனால் காரைக்குடி "ஊழியன்" அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

